பெண்மை —
மனங்கவரும்,
மதிமயக்கும்.
துள்ளு
நடைபோடும்
ஒருகணம்,
துவண்டு தடுமாறும்
மறுகணம்.
பெண்மையின்
பல எண்ணங்களின்
குவியலே
'மெஃப்ரின்'




# மெஃப்ரின்

'மெஃப்ரின்' லுங்கி அணிந்த
மங்கையர் புதியதோர்
கோலம் படைத்துள்ளனர்!

'மெஃப்ரின்' பாலியெஸ்டர்
இழைகலந்த உடுப்புத்
துணிகள் — கேம்ப்ரிக்குகள்,
லான்கள், பாப்லின்கள்;
இளம் சாயல்களில்,
எடுப்பான வண்ணங்களில்,
பெருமிதப் பிரிண்டுகளில்
'மெஃப்ரின்' 100%
பாலியெஸ்டர் சேலைகள்,
பாலியெஸ்டர் இழைகலந்த
காட்டன் சேலைகள்.

தவிர, அதி நவீனமான அரும்பெரும்
அழகு வண்ணங்களிலும்,
பிரிண்டுகளிலும்,
'டெரோஸெல்' பாலியெஸ்டர்
இழைகலந்த காட்டன்
ஷர்ட்டிங்குகள்; இன்னொளி
மிளிரும் வண்ணங்களிலே,
வரிகளிலே, கட்டங்களிலே
'எஸ்டர்காட்' பாலியெஸ்டர்
இழைகலந்த காட்டன்
சூட்டிங்குகள்.

**மபத்லால்
க்ரூப்**

AIYARS-M.217.TM

# சளைக்காமல் மோட்டார் ஓட்டுவோரிடம் பயர்ஸ்டோன் பெற்ற பெயர்

# மிக வலிமையான டயர்



அதிக மைலோட்டமும், அதிகப் பாதுகாப்பும், அதிக சீட்-டெட் எற்கும் தகுதியும் பெறுவதற்கான மும்மடங்கு வலிமையான கட்டுமானம்.

## பயர்ஸ்டோன்

இன்றே காண்க அருகிலுள்ள பயர்ஸ்டோன் விற்பனையாளரை.




FOCUSG-6 (H) TM

**சிபாரிசுசெய்யப்படும் பயர்ஸ்டோன் பாசஞ்சர் கார் டயர் சில்லறை விலைகள்.**

அம்பாசடர் 5 . 90-15 ஒயிட் ப்ளாக் 6 PR- ரூ. 174.99. 5 . 90-15 பிளாக் 6 PR- ரூ. 155.39 ● டோரினோ டாக்ஸி ஸ்பெஷல் 5. 90-15 பிளாக் 6 PR- ரூ. 170.92 ● ..பியட் 5 . 20-14 ஒயிட் பிளாக் 6 PR- ரூ. 149.99 ● ஸ்டாண்டர்டு 5 . 60-13 ஒயிட் ப்ளாக் 6 PR- ரூ. 164.57; 5 . 20-13 ஒயிட் பிளாக் 6 PR- ரூ. 159.95 ● வில்லிஸ் ஜீப் 6 . 00-16 GGND 6 PR- ரூ. 221.13 (விற்பனை வரி & தலவரிகள் தனி).

# கல்கி

## பொருளடக்கம்

விரோதிகிருது, மாசி 22 ★ மார்ச் 5, 1972



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



கல்கி

மலர் 31

இதழ் 32



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
--- பாரதியார்

# முன்னேற்றம் காணுவோமா?

**வ**ரப் போகும் பட்ஜெட்டில் என்னென்ன புது வரிகள் இருக்குமோ என்று இப்போதிலிருந்தே மக்கள் பீதி கொள்ள ஆரம்பித்து விட்டனர். பாகிஸ்தான் போரின் விளைவாக இழந்த போர்க் கருவிகளைப் புதுப்பிக்கும் செலவுகள், புதிய நேச நாடாகிய பங்களா தேஷுக்கு உதவிகள் அளிக்க வேண்டிய கடமை, இதுகாறும் அகதிகள் பராமரிப்பினால் ஏற்பட்ட செலவுகள் — என்று விசேஷ காரணங்களைக் காட்டிப் புது வரிகளுக்குச் சமாதானம் சொல்லக் கூடும்.

நாட்டின் நிலைமையில் எல்லோருக்கும் கவலை தரும் அம்சங்கள் மூன்று. பொருளாதாரத்தில் சீரழிவு; விலைவாசிகளின் உயர்வு; லட்சக்கணக்கானவர்கள் வேலை வாய்ப்பின்றித் தவிக்கும் நிலை. இம்மூன்றும் பெரும்பாலும் ஏற்கனவே, இவ்வளவு ஆண்டுகளாகப் படிப்படியாக விதிக்கப்பட்ட நேர்முக, மறைமுக வரிகளின் பயனேயாகும். இனியும் வரிச்சுமை அதிகரித்தால் இந்த மூன்று உற்பாதமும் அதிகரிக்கும்.

நாட்டுப் பொருளாதாரம் சீர்கெட்டிருக்கிறது என்றால் என்ன? பல தொழில்களில் உற்பத்தி பெருகவில்லை. பெருவாரியான முதலீடு செய்யப்பட்டுள்ள தொழில்கள் — முக்கியமாக சர்க்கார்த் துறைத் தொழில்கள் — லாபகரமாக இயங்கவில்லை. அந்தத் தொழில்களை, குறிப்பாக எஃகுத் தொழிற்சாலைகளை நம்பி இயங்கும் பல்லாயிரக்கணக்கான சிறு தொழில்களுக்குத் தேவைப்படும் ஆதாரப் பொருள்கள் கிடைக்காமையால், அங்கெல்லாம் உற்பத்திக் குறைவு ஏற்பட்டுள்ளது. பஞ்சாலைகள், சர்க்கரை ஆலைகள் போன்ற துறைகளில் அரசாங்கக் கொள்கைகள் காரணமாக உற்பத்தி குறைந்து கொண்டு போகும் நிலை ஏற்பட்டிருக்கிறது. உற்பத்திக் குறைவினால் பொருள்களின் விலை உயருகிறது. அவசியமான பொருள்களில் தட்டுப்பாடு; கிடைக்கும் பொருள்களின் விலையிலோ வாங்க முடியாத அளவுக்கு உயர்வு — இதுவே இன்று நாம் காண்பது. தொழிற்சாலைகளில் சுணக்கம் ஏற்படுகிறபடியால், வேலை வாய்ப்புகளுக்கு இடமில்லாது போய்விடுகிறது. பொருளாதார முன்னேற்றம் ஆண்டுதோறும் எட்டு அல்லது பத்து சதம் உயர்ந்து கொண்டு செல்ல வேண்டும் என்று வற்புறுத்தியபோதிலும், நடைமுறையில் இரண்டு சதம் என்ற அளவுக்குக் குறைந்துள்ளது.

விவசாயத் துறையில் முன்னேற்றம் கண்டுவிட்டோமே என்று ஒருவாறு திருப்தி கொள்ளலாம். இவ்வளவு ஆண்டுகளுக்குப்பின் இப்போதுதான் உணவு இறக்குமதியை நிறுத்திவிடலாம் என்ற நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஆனால் இது நன்றாக நிலைப்பதற்குள்ளாகவே விவசாயிகள் மீது புதிய வரிகள் எவ்வாறு விதிக்கலாம் என்று தீவிரமாக யோசிக்கப்பட்டு வருகிறது. இது நிதானிக்க வேண்டிய விஷயம்.

வேலையில்லாமையைப் போக்க விசேஷக் கமிட்டிகள் சிபாரிசு செய்துள்ளன. சிறு தொழில்கள் வளர்ச்சி, கிராமப்புறங்களில் புதுத் தொழில்களைத் தோற்றுவித்தல், ரஸ்தா போடுதல் — இப்படிப் பல யோசனைகள். ஆனால் செயலில் அமுல் செய்யப்பட்டவை ஒன்றுகூட இல்லை. அல்லது மிக மிகக் கொஞ்சம்.

இத்தகைய சூழ்நிலையிலிருந்து நாட்டின் பொருளாதாரத்தை விடுவித்து முன்னேற்றத்துக்கான வழியை உண்டாக்கித் தர வேண்டும். உற்பத்தி பெருகுவதற்கும் தொழில்களில் முதலீடு செய்வதற்கான ஊக்கத்தை உண்டாக்குவதற்கும் உதவும் சுதந்திரக் கொள்கைகளைப் பின்பற்றினால்தான் விமோசனம் உண்டு. எந்த அளவுக்கு இம்மாதிரி முன்னேற்றச் சூழ்நிலை உண்டாக்க முடியுமோ, அந்த அளவுக்குச் சாதகமாக பட்ஜெட்டை அமைக்க வேண்டும்.

ஆளும் கட்சிக்கு வோட்டுப் போட்டுச் சட்ட சபைக்கு அனுப்பி வைத்தாலே போதும், சுபிட்சம் வந்துவிடும் என்பது வெறும் வாய்ச் சொல்லேயாகும். உண்மை முன்னேற்றம் நடவடிக்கை மூலமே உண்டாக வேண்டும்.

உண்மை முன்னேற்றமா அல்லது ஏமாற்று வித்தையா என்பதைப் பத்து நாட்களில் வரப் போகும் பட்ஜெட் விளக்கி வைக்கும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

## மாதுங்கா தேர்தல்

என் மதிப்புக்குரிய நண்பர் ஸ்ரீ தாண்டேகர் அவர்கள் தேர்தல் போராட்டத்தில் இறங்கியிருப்பது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். இந்திய அரசியல் மூலசாஸனத்தை அழிப்பதற்கு முயலப்படுகிறது. இச்சமயத்தில் சாஸனத்தைக் காக்க வேண்டுமென்பதற்காகவே, ஸ்ரீ தாண்டேகர் தேர்தலுக்கு நிற்கிறார்.

அரசியல் மூலசாஸனம் பணக்காரர்களுக்குச் சாதகமாக பணக்காரர்களின் நலனிலேயே அக்கறை உள்ளவர்களால் வகுக்கப்பட்டது என்று பொய்யாகக் குற்றம் சாட்டப்படுகிறது. உண்மையில் நமது சுதந்திர பிதாக்கள், ஏழைகளின் நலனையும், தாழ்த்தப்பட்டவர்களின் நலனையும் காப்பதற்கே இந்தச் சாஸனத்தை வகுத்தார்கள். மாதுங்காவின் தேசப் பற்றுள்ள மக்கள் யாவரும் சாஸனத்தைப் பாதுகாப்பதற்கே தங்கள் வோட்டுக்களைப் போட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இந்திய அரசியல் சாஸனத்தின் இலட்சியம், அனைவருக்கும் சம நீதி கிடைக்கச் செய்வதே யாகும். இதுவே சுதந்திரக் கட்சியின் இலட்சியமும் ஆகும். இந்த இலட்சியத்துக்கு சோஷலிஸமும் ஓர் உபாயம் என்று சிலரால் கருதப்படுகிறது. சோஷலிஸம் என்பது இலட்சியம் அல்ல; உபாயமே. இந்த உபாயம் எல்லா அதிகாரத்தையும் சர்க்காரிடமே தந்து, மக்களை அடிமைகளாக்கி, நாட்டின் வளர்ச்சியைத் தடுப்பதாகும்.

## அமெரிக்காவும் சீனமும்

பீகிங்கிலிருந்து இதுவரை (பிப்ரவரி 26) வந்துள்ள செய்திகளிலிருந்து முக்கியமாகவோ, திட்ட வட்டமாகவோ எதுவும் தெரியவில்லை. நல்லதே நடக்கும் என்று மிகுந்த நம்பிக்கை கொண்டவர்கள் நிக்ஸன் — மாவ் சந்திப்பினால் எல்லா அணு ஆயுதங்களையும் ஒழித்துக் கட்டுவதற்கு அணு வல்லரசுகள் உடன்பாடு காணக் கூடும் என்று கருதலாம். இவ்விதம் ஏற்பட்டால், அதன்பின் சர்வதேச நாடுகளிடையே சகஜமான முறையில் தொடர்புகள் அபிவிருத்தி அடையும். ஆனால் இப்படி நம்பிக்கை கொள்வது வெறும் கற்பனையாகவே ஆகவும் இடமுண்டு. பகவானின் அநுக்கிரகம் இருந்தால் இந்த உலக கோளத்தில் எது நடப்பதும் அசாத்தியம் அல்ல. மனிதர்கள் மட்டும் அவர்களது தயவிலுள்ள மற்ற வாயில்லா ஜீவன்களிடம் இரக்கம் காட்டி ஒழுகுவராயின், இருநூறு கோடி மக்களின் பிரார்த்தனை வீண் போகாது.







## ஜலந்து மைதானம்

சென்னை ஜலந்து மைதானத்தில் இந்திய சர்க்கார் தனது ராணுவ சிப்பந்திகளுக்கான வீடுகளோ அல்லது வேறு கட்டடங்களோ எழுப்புவதைத் தமிழ்நாட்டு அரசாங்கமும், மற்ற முக்கியமான கட்சிகளும், சென்னை மாநகராட்சியும் வெகுவாக ஆட்சேபித்திருக்கின்றன

ஆட்சேபம் எழுப்பப்பட்டிருப்பது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். சென்னைக்கு ஒரே நுரையீரலைப் போலிருப்பது ஐலந்து மைதானமேயாகும். அங்கே கட்டடங்கள் எழுப்புவதால், நகருக்குள் ஆரோக்கியமான கடற்காற்று புகுவதற்குத் தடை ஏற்படும். இதனால் நகர மக்களின் தேக நலனுக்கு ஈடு செய்ய முடியாத தீங்கு உண்டாகும். ஐலந்து மைதானத்தில் கட்டடம் எழுப்புவதற்குக் கடும் கண்டனம் தோன்றியிருப்பது மிகவும் நியாயமாகும். முன்பே இந்திய சர்க்கார் இவ்விடத்தில் கட்டடம் எழுப்பத் திட்டமிட்டபோது அதற்கு ஆட்சேபம் இருந்தது. ஆட்சேபத்தின் நியாயத்தை உணர்ந்து இந்திய சர்க்கார் தனது திட்டத்தைக் கைவிட்டது. பழைய அரசாங்க தஸ்தாவேஜிகளிலிருந்து இந்த உண்மையை அறியலாம்.

ஐலந்து மைதானத்தில் வீடுகள் கட்டுவதால், சுத்தமான கடற்காற்றுக்குத் தடுப்பு உண்டாவதோடு, ராணுவச் சிப்பந்திகளின் வேலைக்காரர்கள் இவ்விடத்தில் அசுத்தமான சேரிகளை உண்டாக்க நேரிடும். ராணுவச் சிப்பந்திகள் ஐலந்து மைதானத்தில் தான் குடியிருக்க வேண்டுமென்பதில்லை. அவர்கள் அன்றாடம் பணி புரியும் அலுவலகத்துக்கு அருகிலேயே வீடுகள் இருப்பதுதான் அவர்களுக்குச் சௌகரியமாயிருக்கும்.

இந்தப் பிரச்னையில் அரசியல் கட்சிக் கலப்பு ஏதும் இல்லை. நகரின் ஆரோக்கியத்தைக் கருத்தில் கொண்டால் மாநகராட்சியின் ஆட்சேபம் மிகவும் நியாயமானது என்று தெரியும். ஆட்சேபணையை அழுத்தமாக வெளியிட்டு இப்போதே வெற்றி கண்டாக வேண்டும். உடனுக்குடன் இவ்விதம் செய்யாவிடில், பிற்பாடு கட்டடங்கள் எழும்பிவிடும்; யதார்த்தத்தில் ஸ்தூலமாக வந்துவிட்ட ஓர் உண்மையை எவ்விதத்திலும் மாற்ற முடியாமலே போகும்.

ஐலந்து மைதானப் பிரச்னை வெறும் உள்ளூர் சமாசாரம் மட்டுமல்ல. அதற்குப் பரவலான உட்கிடை உண்டு. இந்தியாவில் உள்ள எல்லா நகரங்களிலுமே நமது ஐலந்து மைதானம் போன்ற ஓரிரு நுரையீரல்களை அமைத்துத் தர வேண்டும். கடற்காற்று கிடைக்காத நகரங்களிலும் இதுபோன்ற காலி மைதானங்கள் இருக்க வேண்டும். அவற்றில் கட்டடங்களோ, சேரிகளோ எழுப்புவதைக் குற்றமாக்க வேண்டும். மரங்கள் நடலாம். இவ்விடங்களைப் பிராண வாயு உற்பத்திச் சாதனங்களாகக் கருத வேண்டும். குடிநீர்த் தேக்கங்களை அசுத்தப் படுத்தாமல் குற்றச் சட்டத்தின் மூலம் காப்பதுபோல் இத்தகைய காலி மைதானங்களையும் முக்கியமாகக் கருதி அவை அசுத்தம் ஆகாமல் கண்டிப்புடன் காக்க வேண்டும்.

# என்ன சேதி?

## சிறு தொழில்களுக்குச் சிறந்த தலைவர்

சிறு தொழில் சங்கங்களின் அகில இந்திய சம்மேளனத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட திரு எம். எஸ். பார்த்தசாரதிக்கு எமது பாராட்டுக்கள். பதின்மூன்று ஆண்டுகளாகச் செயலாற்றி வரும் இந்த சம்மேளனத்துக்கு, இப்போதுதான் முதல் தடவையாக ஒரு தமிழகச் சிறு தொழிலதிபர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் என்பது தமிழகத்தில் தொழில்களில் ஈடுபட்டுள்ளவர்களுக்கெல்லாம் மிகவும் மகிழ்ச்சி அளிக்கும். திரு பார்த்தசாரதி ஸ்டாண்டர்டு பென்சில் பாக்டரி, விஜயா என்ஜினீரிங் கார்ப்பரேஷன் ஆகியவற்றின் தலைவர் என்பதுடன் பல சிறு தொழில்களுக்கு இன்றியமையாத ஆலோசகர். அவர்களின் கஷ்டங்களையெல்லாம் அனுபவம் மூலம் நன்கு உணர்ந்தவராதலால், அவற்றின் நிவாரணத்துக்காகச் சலிப்பின்றிப் போராடுவதில் தீரர். அவருடைய தலைமைப் பதவித் தேர்தலை முன்னிட்டு அவருக்கு அளித்த பாராட்டு உபசார விழாவில், அமைச்சர் திரு மாதவன் அவர்களைத் தலைமை தாங்கச் செய்து, பாதுகாப்பு நிதிக்காகச் சிறு தொழில் அதிபர்கள் சார்பாக ரூ. 5000/-- நிதி வழங்கியதுடன் பன்னிரண்டு அம்சக் குறைபாடுகளை ஜாபிதா போட்டுச் சொல்லி, அவற்றைப் பரிசீலனை செய்யும்படி கேட்டுக் கொண்டார். தமிழ்நாட்டில் இயங்கிக் கொண்டிருக்கும் 25,000 சிறு தொழில்களுக்கும் உண்மையான பிரதிநிதி திரு பார்த்தசாரதி என்பதற்குப் பாராட்டு விழாவுக்கு வந்திருந்த சிறு தொழிலதிபர்களின் பெரும் கூட்டமே சான்று கூறியது. அச்சமயம் பேசிய திரு கே. வி. சீநிவாசனும், இந்தியன் பாங்கு திரு லக்ஷ்மிநாராயணனும், திரு ரங்கபாஷ்யமும், அமைச்சர் மாதவனும் திரு பார்த்தசாரதியின் திறமையை வாயார, மனமாரப் பாராட்டினார்கள். திரு பார்த்தசாரதியின் பதவிக்காலம் சிறு தொழில்களுக்குப் பயனுள்ள காலமாகத் திகழட்டும்!



திரு எம். எஸ். பார்த்தசாரதி

## சபாஷ், சங்கீதவித்வான்கள்!

நமது இசைக் கலைஞர்கள் தேசப் பற்றிலே மற்றவர்களுக்குச் சளைத்தவர்களல்ல எனக் காட்டியிருக்கிறார்கள். மியூசிக் அகாடெமியின் 1971–72 இசை விழாவில் பங்கு கொண்ட சங்கீத வித்வான்கள் (வாய்ப்பாட்டுக் கலைஞர்கள், வாத்தியக் கலைஞர்கள் அனைவரும் சேர்ந்து) பாதுகாப்பு நிதிக்காக ரூ. 2062 வழங்கியிருக்கிறார்கள். பிப்ரவரி 24ந் தேதியன்று தமிழக முதலமைச்சரிடம் நிதி வழங்கப்பட்டது.

# மாதுங்காவுக்கு மாசில்லாத வேட்பாளர்

மகாராஷ்டிர மாநிலச் சட்டசபைக்குத் திறமை வாய்ந்த, கௌரவமுள்ள, நல்ல பிரதிநிதியைத் தேர்ந்தெடுத்து அனுப்பி வைக்கும் நல்வாய்ப்பு பம்பாய் — மாதுங்கா தொகுதி வாக்காளர்களுக்குக் கிட்டியிருக்கிறது. இது அவர்களுடைய அதிருஷ்டம். அந்தத் தொகுதிக்கு ஸ்ரீ என். தாண்டேகர் அபேட்சகராக நிற்கிறார்.

சுதந்திரக் கட்சியின் சார்பில் 1963ம் ஆண்டிலிருந்து சென்ற இடைக்காலத் தேர்தல்வரை நாடாளுமன்றத்தில் அங்கத்தினராக இருந்தவர்; சபையின் நடவடிக்கைகளில் எல்லாம் தீவிரப் பங்கு கொண்டவர்; சட்டசபை நுணுக்கங்கள் எல்லாம் நன்கு தெரிந்தவர்; மக்களுடைய உரிமைக்காக வாதாடுவதில் சமர்த்தர். சுதந்திரக் கட்சிக் கொள்கைகளால்தான் ஜனநாயகத்தைக் காப்பாற்ற முடியும்; மக்களின் சுதந்திரத்தை நிலைநாட்ட முடியும் என்று உறுதியாக நம்புகிறவர். இடைக்காலத் தேர்தலில் உடல் நலக் குறைவினால் போட்டி இடவில்லை. இப்போது மாநில அரசியலில் ஈடுபட முன்வந்திருக்கிறார்.

என். தாண்டேகரின் வாழ்க்கையில் சில முக்கியமான அம்சங்களை நினைவுகூர்ந்தாலே அவர் சட்டசபைக்கு ஓர் அணிகலனாக விளங்கும் தகுதி உள்ளவர் என்பது தெரியும். தகுதி என்ன, உரிமை உள்ளவர் என்றே சொல்லலாம். இருபத்திரண்டு ஆண்டு காலம் (1931 முதல் 1953 வரையிலும்) ஐ.ஸி.எஸ். உத்தியோகஸ்தர் என்ற வகையில் அவர் வகித்த உயர் பதவிகள் பலதரப்பட்டவை. மாவட்ட கலெக்டராகவும், சுங்க இலாகாவிலும் வருமான வரி கமிஷனராகவும், மத்திய அரசிலேயே நிதி இலாகாவிலும், இந்தியா—பாகிஸ்தான் பிரிவினைக்குப்பின் நிதி விவகாரங்களைச் சீர்செய்யும் பணியிலும், முக்கியமாக ஸிந்தியா கப்பல் கம்பெனியின் சார்பிலும், திரு என். தாண்டேகர் புரிந்த பணிகளும் பெற்ற அனுபவங்களும் மிக விரிவானவை. அரசாங்க நிர்வாக நுட்பங்களைத் தெரிந்துள்ளவர் என்பதைப் போலவே தனியார் தொழில் துறை நிர்வாகத்திலும் பூரண அநுபவம் உள்ளவர் திரு தாண்டேகர். அஸோஸியேடட் ஸிமிண்ட் கம்பெனியிலும், இந்தியா ஆக்ஸிஜன் கம்பெனியிலும் ஏறக்குறைய பத்தாண்டு காலம் உயர் நிர்வாகம் நடத்திய அநுபவசாலி. இவற்றைத் தவிர, பொது வாழ்க்கையில் பம்பாய் மானேஜ்மெண்ட் சங்கத் தலைவராகவும், பம்பாய் வர்த்தகத் தொழில் சங்கத் தலைவராகவும், தொழிற் கல்வியில் ஈடுபட்டுள்ள கழகங்களில் தலைவராகவும் பணியாற்றிய பெருமை உள்ளவர். மராத்தி, குஜராத்தி, இந்தி, தமிழ் முதலிய மொழிகளில் சரளமாகப் பேசும் திறமை உள்ளவர்.



அரசியலில் இவர் புகுந்து, உத்தரப் பிரதேசத்தில் கோண்டா தொகுதியில் திரு ராம். ரதன் குப்தாவுக்கு எதிர் நின்று வெற்றி பெற்றுப் பல ஊழல்களை நாடறிய அம்பலப் படுத்தித் தமது வெற்றியை நிலைக்கச் செய்த அசாதாரண வீரர் திரு தாண்டேகர். 1967ம் வருஷத் தேர்தலில் ஜாம்நகர் தொகுதியில் அப்போதைய அமைச்சர் மனுபாய் ஷாவுக்கு எதிராகப் போட்டியிட்டு, வெற்றி கண்டவர் திரு தாண்டேகர். இவ்விரண்டு தேர்தல்களும், நிர்வாகத்தில் எவ்வளவு சமர்த்தரோ அதேபோல் அரசியலிலும் திரு தாண்டேகர் பண்பட்டவர் என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. எனினும் — பலரைப் போல் அரசியலை நம்பிப் பிழைப்பவர் அல்ல திரு தாண்டேகர். கணக்காயராகத் தொழில் நடத்தி வருகிறார். சர்க்கார் சலுகைகளை எதிர்பாராமல் மக்களுக்கு நன்மை செய்யும் சூழ்நிலையிலிருப்பவர்.

இவற்றுக்கெல்லாம் மகுடம் வைத்தது போல், மூதறிஞர் ராஜாஜியின் கருத்துக்களால் கவரப்பட்டு, நாட்டுக்கு நலன் செய்யவும், மக்களுக்குச் சேவை புரியவும் தமது பரந்த அநுபவத்தை ஆதாரமாகக் கொண்டு இப்போது மாதுங்கா வாக்காளர்களின் ஆதரவைக் கோரி நிற்கிறார்.

மாநில அரசாங்க அலுவல்களில் சீர்திருத்தங்கள் செய்ய நிறைய இடமிருக்கிறது. ஊதாரிச் செலவுகளைக் குறைக்க இடம் இருக்கிறது. அயல்நாட்டுத் தயவிலிருந்து நம்மை விடுவித்துக் கொள்ளவும், ஆக்கத் துறைகளில் செயல்புரியவும் தேவை மிகுதியாக உள்ளது. இதற்குத் தன்னம்பிக்கையை வளர்ப்பதும், சுய முயற்சியை ஊக்குவிப்பதும் அவசியமாகிறது. இத்தகைய சூழ்நிலையில் எந்தத் துறையிலும் சிறப்பாகப் பணி புரியும் ஆற்றல் பெற்ற திரு தாண்டேகரை மகாராஷ்டிர சட்டசபைக்குத் தேர்ந்தெடுத்தனுப்புவது மிகவும் அவசியமாகும். அவரை அங்கத்தினராகப் பெற்ற சட்டசபை விவாதங்களின் தரம் உயர்வு பெறும். அவரைச் சட்டசபைக்கு அனுப்பி வைத்த தொகுதிக்கும் பெருமை உண்டு. நாட்டு நலனுக்கும் மக்கள் உரிமைக்கும் பாடுபடும் தீரரான திரு தாண்டேகர் புத்திசாலிகளான தமிழர்கள் மிகுதியாக வாழும் மாதுங்கா தொகுதியில் போட்டியிடுவது அவர்களுடைய வருங்கால நலனுக்கு நல்ல அறிகுறி. மாதுங்கா தமிழ்ப் பெருமக்கள் அனைவரும் தேர்தல் நாளன்று தவறாமல் வாக்குச் சாவடிக்குச் சென்று, தங்கள் பொன்னான வாக்குச் சீட்டுக்களை நட்சத்திரச் சின்னத்தில் திரு என். தாண்டேகருக்கு வழங்கி, அவருக்கு வெற்றியைத் தேடித் தர வேண்டுகிறோம்.

திரு என். தாண்டேகரின் உருவப் படத்தை இவ்விதழ் அட்டையில் வெளியிடுவதில் மகிழ்ச்சியடைகிறோம். தேர்தலில் அவர் வெற்றி வாகை சூடுவாராக.



# வேதத்தின் மூல வடிவம்

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

**பா**ஷையை வைத்துக்கொண்டு, 'இது என் பாஷை, அது உன் பாஷை, இந்தப் பாஷைதான் உயர்ந்தது, அந்தப் பாஷைதான் உயர்ந்தது' என்று இப்போது பலர் சண்டை போடுவதைப் பார்த்தால் மிகவும் துக்கமாக இருக்கிறது. நாம் எல்லோரும் ஊமையாகப் போனாலும் தேவலை என்றுகூடத் தோன்றுகிறது. நம்முடைய அபிப்பிராயத்தைத் தெரிவிக்க இருக்கும் கருவி பாஷை. அது எல்லா ஊரிலும் ஒன்றாக இருக்க முடியாது. ஒவ்வொரு கூட்டம் ஒவ்வொரு பாஷையைப் பேசும். ஒவ்வோர் ஊரிலும் வெவ்வேறு பாஷை இருக்கும். பாஷையில் சண்டை என்பது பெரிய தப்பு. மதத்தைக் காட்டிலும் ஸ்வாமியைக் காட்டிலும் பாஷைதான் உயர்வென்று நினைப்பது மிகவும் தப்பு. பாஷை என்ற ஒரு காரணத்துக்காக மட்டும் சம்ஸ்கிருதம் வேண்டுமா என்றால் நான்கூட வேண்டாம் என்று சொல்வேன். ஆனால் நம்முடைய மதத்துக்கு மூலமான வேதம், சாஸ்திரம் எல்லாம் அந்தப் பாஷையில் இருப்பதனால் வேதத்தையும் சாஸ்திரங்களையும் ரட்சிப்பதற்காக சம்ஸ்கிருத பாஷையையும் ரட்சிக்கத்தான் வேண்டும்.

திருவள்ளுவர் குறளை எழுதி அதை அரங்கேற்ற மதுரைக்கு வந்தார். பொற்றாமரைக் குளத்தில் சங்கப் பலகை இருந்தது. திருவள்ளுவர் தம் புத்தகத்தைக் கொண்டுபோய் சங்கப் பலகையில் வைத்தாராம். குட்டைப் புத்தகம் அது. அது மாத்திரம் பலகையில் இருக்கப் புலவர்கள் எல்லோரும் குளத்தில் விழுந்து விட்டார்களாம். குறள் அங்கே அரங்கேற்றப்பட்டது. இந்தப் புத்தகத்தை இன்னார் பண்ணினார், இதில் இன்ன உயர்ந்த விஷயங்கள் இருக்கின்றன என்று அதைப் பற்றிப் பல புலவர்கள் பாடியிருக்கிறார்கள். 'திருவள்ளுவ மாலை' என்று அதற்குப் பெயர். அதில் ஒருவர் பாடுகிறார்:

'ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந் ததனினிது
சீரிய தென்றொன்றைச் செப்பரிதால் - ஆரியம்
வேதம் உடைத்து தமிழ் திருவள்ளுவனார்
ஓது குறட்பா உடைத்து.

'சம்ஸ்கிருதம் உயர்வா? தமிழ் உயர்வா?' என்று யோசனை பண்ணிப் பார்த்தேன். சம்ஸ்கிருதமும் தமிழும் சமம்தான். ஒன்று உயர்வு ஒன்று மட்டம் என்று சொல்ல முடியாது. எதனாலே என்றால் சம்ஸ்கிருதத்தில் வேதம் இருக்கிறது. தமிழில் இப்போது திருக்குறள் இருக்கிறது. இதுவும் ஒரு தமிழ் மறை. வேதத்துக்குச் சமமான ஒன்று தமிழில் இல்லை என்றால் சம்ஸ்கிருதம் உயர்வாக இருக்கலாம். திருக்குறள் வேதத்துக்குச் சமானமாக இருக்கிறது. அதனாலே இரு பாஷைகளும் சமமாயின'' என்று இச் செய்யுளில் கவி சொல்லியுள்ளார்.

சம்ஸ்கிருதத்துக்கு எதனால் கௌரவம்? வேதம் அதில் இருப்பதினால்தான் என்பதை அந்தப் புலவர் சொல்லியிருக்கிறார்.

'**வே**தம் சம்ஸ்கிருதத்தில் இருந்தால் என்ன? மொழிபெயர்த்து விடலாமே' என்று நினைக்கலாம். பல நூல்கள் அப்படி இந்தக் காலத்தில் மூல பாஷையிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டு வருகின்றன. அவற்றில் மூலமே உருமாறிப் போவதுமுண்டு. ஒரு விஷயத்தை ஒரு மனிதன் சொன்னால் அது அவனிடமிருந்து எந்த வாக்கில் வருகிறதோ அதே வாக்கில் இருந்தால் ஒரு காலத்தில் இல்லாவிட்டாலும் மற்றொரு காலத்தில் அதன் உண்மைப் பொருளைத் தெரிந்து கொள்ள முடியும். ஒரு பொருளைச் சொல்வதற்கு ஒரு பாஷையில் அழகான சொல் ஒன்று இருக்கும். அதை மொழிபெயர்க்கும் போது அதற்கு ஏற்ற சொல் இதர பாஷையில் இருக்காது; சில சமயங்களில் நான்கைந்து வார்த்தைகளைப் போட்டுச் சுற்றி வளைத்துச் சொல்ல வேண்டியிருக்கும். அந்த ஒரு வார்த்தை அந்த இடத்தில் எந்த அபிப்பிராயத்தை வெளிப்படுத்துகிறதோ, அந்த அபிப்பிராயத்தை மொழிபெயர்ப்பில் காண முடியாமல் போகலாம். இரண்டாவது, மொழிபெயர்க்கிறவன் தன்னுடைய ஞானத்துக்கு ஏற்றாற்போலத்தான் பொருள் பண்ணிக் கொண்டு சொல்ல முடியும். ஒருவன் பண்ணிய மொழிபெயர்ப்புச் சரி அல்ல என்று இன்னொருவன் பண்ணுவான். பண்ணுகிறவனுடைய அபிப்பிராயத்துக்கும், மதத்திற்கும் ஏற்றபடி அந்த மொழிபெயர்ப்பு இருக்கும். மொழிபெயர்ப்புகளில் எதை எடுத்துக் கொள்வது என்ற சந்தேகம் வரும்போது, மூலம் எப்படி இருக்கிறது என்று பார்க்கத் தோன்றும்.

ஆகவேதான் மூலமாகிய வேதத்தை அப்படியே வைத்துக் கொள்ள வேண்டும். மூலமாக இருக்கும் ஒரே வேதத்தைத் தங்கள் கருத்தின்படி பொருள் கொண்டு ஒவ்வோர் ஆசாரியரும் ஒவ்வோர் சித்தாந்தத்தை வெளியிட்டுள்ளனர். அந்த ஆசாரியர்கள் தத்தம் சித்தாந்தங்களையே ஆதாரமாகக் கொண்டு மூல வேதத்தை மாற்றி வெவ்வேறு மதங்களைச் செய்துவிடவில்லை. மூலம் ஒன்றாக இருக்கிறது. மூலம் மொழிபெயர்க்கப்படாமல் அப்படியே இருந்து கொண்டிருப்பதால்தான் அந்த அந்த ஆசாரிய புருஷருக்கு ஏற்றபடி காலத்துக்குக் காலம் புது அபிப்பிராயம் சேர்ந்து வந்திருக்கிறது. இன்னொரு மதமாகப் போக வேண்டிய அவசியம் ஏற்படாமல் இருந்து வந்திருக்கிறது. இந்த மதங்களுக்கெல்லாம் வைதிக மதம் என்ற பொதுப் பெயர் இருந்து கொண்டிருக்கிறது.

# ஓர் ஊதுவத்தி




இன்று அலுவலகத்தில் நடந்ததைப் பற்றி இப்போது நான் எண்ணிப் பார்க்கிறேன்.

மிருதியான வேலைகளின் அவசர அவசியங்களுக்கிடையில் சில சமயம் சில முக்கியமான விஷயங்களையும்கூட நாம் மறந்து விடுவது இயல்புதான்.

ஆனால் கிரிஜாவின் விஷயம் அப்படிப்பட்டதா ? ஒரு வாரத்துக்கு முன்பே அவள் என்னிடம் சொல்லியிருந்தாள்:

''குமார்! நாலே நாட்கள்தான் 'டயம்' தருவேன்..... எனக்கு இரண்டாயிரம் ரூபாயாவது வேண்டியிருக்கும். இரண்டு வருட போனஸில் அதைத் திருப்பிக் கொடுத்துவிடுவேன். சரிதானே ?''

வேலை செய்ய வேண்டிய அவசியமே இல்லாமல் சொத்தும் பதவிசுமாக இருக்கும் என்னைச் சுற்றி வலம் வரும் எத்தனையோ கிரகங்களுக்குள் கிரிஜாவைச் சேர்த்துவிட முடியாது.

அலுவலகத்தில் என்னைவிட உயர் பதவி வகிப்பவள் கிரிஜா. நான் பி. ஏ. என்றால் அவள் எம். ஏ. குடும்ப பாரத்தின் அவசியத்தை முன்னிட்டுப் பல இலாக்கா பரீட்சைகளைத் தேறி அந்தத் தனியார் கம்பெனியில் ஒரு சப்–ரெகுலர் பதவியை வகிப்பவள்.

அவள் இலாக்காவிலும் இரண்டொரு மாதங்கள் வேலை செய்திருக்கிறேன் நான். பணக்காரன் என்பதற்காக என் தலையில் மற்றவர்கள் அதிக வேலையைச் சுமத்தாமல் நழுவினாலும் —

கிரிஜா கண்டிப்புடனேயே நடந்து கொண்டது அவளுடைய கடமை உணர்வைத்தான் அறிவுறுத்தியது.

''மிஸ்டர் குமார்! மன்த்லி ஸ்டேட்மெண்ட் எல்லாம் நேரப்படி அனுப்பிவிட வேண்டும். அதில் எந்தக் காலதாமதத்தையும் என்னால் அனுமதிக்க முடியாது.''

இப்படிக் கறாராக இருப்பாள் கிரிஜா. இலாக்காவில் எனது 'நண்பர்களின்' குரல்களும் கூடவே என் காதுகளில் கிசுகிசுக்கும்:

'' குமார் ! அவள் கிடக்கிறாள்.... இந்த வருஷமும் தனக்கு ஏதாவது 'டபிள் இன்க்ரிமெண்ட்' கிடைக்க வேண்டும் என்பதற்காக விரட்டுகிறாள்...கவலைப்படாதே!...''

''முப்பத்தைந்து வயசாகிறது. கல்யாணமாவது ஒன்றாவது ! வீட்டில் இவளுக்குக் கீழே நாலும் பெண்கள். காலையில் எழுந்தால் அதுகளுக்கு வீட்டு வாசலில் கோலம் போடத் தெரியும், அவ்வளவுதான். இதிலே அடுத்த தங்கைக்குக் கல்யாணம் செய்து வைத்து

விட வேண்டும் என்று எத்தனை ஆசை இந்த அம்மாளுக்கு!''

ஆம், கிரிஜா தன்னுடைய அடுத்த தங்கை புஷ்பாவுக்குக் கல்யாணம் செய்து வைக்க வேண்டும் என்ற முயற்சியில் ஈடுபட்டு வந்ததைப் பற்றி எனக்கு நன்ருக — மற்றவர்களை விட ஒரு படி அதிகமாகவே தெரியும்.

ஒரு நாள் அதைப் பற்றிக் கிரிஜாவே என்னிடம் கூறியிருக்கிருள் :

''குமார்! வாழ்க்கை என்பது சம்பவங்கள் நிறைந்தது. பிறப்பு, இறப்பு என்பவைகூடச் சம்பவங்கள்தாம். ஆனல் கடமை என்பதை ஒரு சம்பவமாகக் கொண்டுவிட முடியுமா? கடமை என்ற உணர்வைக் கொண்டு எத்தனையோ நிகழ்ச்சிகள் உருவாகலாம்; ஆனல் கடமை என்பது மட்டும் தனியாகவே இருக்கிறது. என் குடும்பம் சம்பந்தப்பட்ட வரை முடிவுகள் எடுத்துக் கொண்டிருக்கும் கிரிஜாவைப் பார்ப்பேன்.

அமைந்த வடிவம். பதினெட்டு வயதுப் பருவத்தில் மலர்ந்திருக்கக்கூடிய அழகு இந்த முப்பத்தைந்து வயதில் அடக்கமாக மேனியில் அமர்ந்திருந்தது. உணர்ச்சிகளை அடக்கி வைத்திருக்கக் கூடிய பெண்மணியாகவே தோன்றவில்லை.

நாட்கள், வாரங்கள், மாதங்கள் ஓடிய வேகத்தில் — வேலையில் அவள் உயர்ந்தும் வந்த வேகத்தினிடையில் — கடமைகள் அவளை அழுத்திய வேகத்தினிடையிலும் நிதானம் தவருத அழகு கிரிஜாவிடம் குடி கொண்டுதான் இருந்தது. இவளுடைய மூன்று சகோதரிகளும் நிச்சயமாக மிக நல்ல அழகிகளாகத்தான் இருப்பார்கள் என்று எனக்குத் தோன்றியது.

# எரிவதற்குள்...

க. பஞ்சாபகேசன்



அந்தக் கடமை என்பது நான்தான்....''

அவள் அடுத்த தங்கை புஷ்பாவுக்கு வயது இருபத்தைந்து ஆகிறது. கிரிஜாவுக்கும் புஷ்பாவுக்கும் இடையில் பத்து வயது பெரிய வேற்றுமை தான். ஆனல் புஷ்பாவுக்குப் பிறகு அடுத்தடுத்து இரண்டு பெண்கள் — கோமதியும் தர்மாவும் — 'கிடுகிடு'வென்று பிறந்துவிட்டார்களே!

''....குமார்! அப்பா, அம்மா இரண்டு பேரும் குளோஸ்! இதுகளுக்கு நான்தான் இருக்கிறேன். ஒரு பெற்றோர் செய்ய வேண்டிய கடமை அவர்களிடம் எனக்கு இருக்கிறதல்லவா?''

இப்படிக்கூட வாழ்க்கை அமையக்கூடுமா என்று எனக்கு ஆச்சரியமாக இருக்கும்.

என் எதிரே பிரித்து வைத்த 'லெட்ஜர்' பிரித்து வைத்தபடியே இருக்க, சற்றுத் தொலைவில் நடுவில் பெரிய மேஜையின் எதிரே 'ஃபைல்'களை அநாயாசமாகப் படித்து

அவர்களில் அடுத்த தங்கையான புஷ்பாவுக்குத்தான் இப்போது திருமணம் நிச்சயமாகிக் கொண்டிருந்தது.

''குமார் ! என் தங்கைகளுக்குக் கடவுள் நல்ல அழகைக் கொடுத்திருக்கிறார். வேறு எந்தவிதமான சொத்தும் — அவர்களுடைய அக்காள் சம்பாதிக்கும் இந்த இரண்டு கைகளைத் தவிர — அவர்களுக்குக் கிடையாது. எல்லோரையும்விடப் புஷ்பா ரொம்ப ரொம்ப அழகி......''

ஆனால் அந்தப் புஷ்பாவை ஒரு சாதாரணப் பள்ளி ஆசிரியருக்குத்தான் கிரிஜா நிச்சயம் செய்திருந்தாள். அக்காள் படித்ததுபோல் மூன்று தங்கைகளும் படிக்காதது மட்டுந்தானா குறை ? அந்த அக்காளுடைய படிப்பும் உத்தியோகமும் தானே சொத்துக்களாக இருந்தன?

அன்று அலுவலகத்தில் கிரிஜா ஒரு முத்தாய்ப்புடன் என்னிடம் கூறினாள்:

''.....குமார்! நீங்கள் கடனாகக் கொடுக்கும் இரண்டாயிரத்துக்குப் புரோ நோட்...''

''கிரிஜா ! நீங்கள் இப்படிப் பேசினால் எனக்குப் பிடிக்காது. நான் பணக்காரன்தான். ஆனால் உங்களிடம் நம்பிக்கை இல்லாதவன் அல்ல. மேலும் நான் ஒரு லேவாதேவிக்காரன் அல்ல..... நாளைக்கே 'செக்' தருகிறேன்'' என்று சொல்லிவிட்டு என் வீட்டுக்குப் புறப்பட்டேன்.

ஆபீஸ் வாசலில் என் ஸ்கூட்டர் 'ஸ்டார்ட்' செய்யாமல் சிறிது மக்கர் செய்த நேரம்....

''சார்.....'' என்ற குரல் கேட்டது.

திரும்பிப் பார்த்தேன். அலுவலகத்தில் முப்பது வருட காலமாகப் பணியாற்றும் சீனியர் கிளார்க் வாசுதேவன் நின்று கொண்டிருந்தார்.

ஸ்கூட்டரை விட்டுவிட்டு, ''என்ன வாசு சார்?'' என்றேன்.

''நான் சொல்கிறேனே என்று எதுவும் வித்தியாசமாக நினைக்காதீர்கள், குமார் ! கஷ்டப்படுகிறவர்களுக்கு உதவி செய்யத்தான் வேண்டும். அந்த அம்மாவுக்கு நீங்கள் இரண்டாயிரம் அல்ல, பத்தாயிரம்கூட உதவுங்கள். ஆனால் பாத்திரமறிந்து.....''

''வாசு! என்ன சொல்கிறீர்கள், நீங்கள்?''

'' இப்போது நேராக எங்கே போறீங்க, குமார் ?''

''வீட்டுக்குத்தான்.''

''வீட்டுக்குப் போக வேண்டாம். நேராகத் திருவல்லிக்கேணிக்குப் போங்கள். மெரினா பீச்சில், காந்தி சிலைக்கு அப்பால், மணல் வெளியில்... அந்தப் பெண் புஷ்பாவைப் பார்க்கலாம்....''

''வாசு....''

''குமார்! உங்களுக்கு உலக அனுபவம் போதாது. பணம் இருந்தால் உலக அனுபவம் இருக்காது; உலக அனுபவம் இருந்தால் பணம் இருக்காது... வயது வந்த பெண்களை இப்படி வீட்டில் விட்டு விட்டு இந்தப் பெரிய பெண் கடமையே உருவாக....அதெல்லாம், தன் கூடப் பிறந்தவர்களைக் காப்பாற்றுவதெல்லாம் உண்மைதான்... வாசு! இருட்டு விழுவதற்குள் மெரினாவுக்குப் போங்கள்...''

ஸ்கூட்டர் ஸ்டார்ட் ஆகி விட்டது. அதுவும் என்னை மெரினாவுக்கு உடனே தள்ளத்தான் ஸ்டார்ட் ஆகி விட்டதோ?

பாதி வழி போகும்போதுதான் எனக்கு இன்னொரு நினைவு வந்தது.

கிரிஜாவின் தங்கைகளில் யாரையும்—புஷ்பாவையும் சேர்த்துத்தான் — நான் இதற்கு முன்பு பார்த்ததே கிடையாதே! என்ன செய்வது? கிரிஜாவின் முக ஜாடை அடையாளம் அவள் தங்கைக்குக் கொஞ்சமாவது இருக்கலாமே என்ற எண்ணத்துடன் ஸ்கூட்டரை வேகமாக இயக்கினேன்.

மெரினாவில் நான் பார்த்தது என்ன? கிரிஜாவின் முகத்தையே உரித்து வைத்திருந்தது அந்தப் பெண் புஷ்பாவுக்கு. இள வயதின் மினுமினுப்பில் கிரிஜாவை விடப் புஷ்பா நல்ல அழகுடன் இருந்தாள்.

ஒரு கையில் ஒரு பையை ஏந்தியிருந்தாள் அவள். இன்னொரு கையில் அநேக ஊதுபத்திப் பாக்கெட்டுகள். 'கம்'மென்ற மணம். கீழே காந்தி சிலைக்கு அடியில் நாலைந்து சின்ன ஸ்டாண்டுகளை வைத்து ஊதுபத்திகள் பொருத்தப்பட்டிருந்தன. அவற்றிலிருந்து எழுந்த மணம்தான் கடற்கரைக் காற்றின் ஏந்தலில் சூழ்நிலையை வியாபித்திருந்தது.

அருகில் குரல்கள்:

''ஊதுபத்தி விற்கிறதெல்லாம் வெறும் சாக்கு... வாசனையோடு வாசனையாக...''

''இருந்தாலும் அவள்கிட்டே ஊதுவத்தி வாங்குவதற்குத்தான் எத்தனை கூட்டம்! நல்ல வியாபாரம்.''

''அழகையும் மணத்தையும் அருகருகில் வைத்தால்...''

தாங்க முடியாத நிலையில் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த என் அருகில் இப்போது புஷ்பாவே குரல் கொடுத்தாள்:

''இந்த மாதிரி மணமுள்ள ஊதுவத்தி எங்கும் கிடைக்காது, சார்! சுவாமி படத்துக்கு எதிரில் வைத்தால் படத்தில் கடவுளின் மூச்சையே கேட்கலாம்...''

அவ்வளவுதான். என் நெஞ்சம் உறைந்து விட்டது. இந்தப் பெண் என்ன சொல்கிறாள்? அவளை நிமிர்ந்து பார்த்தேன்.

''வேண்டுமானால் வாங்கிக் கொள்ளுங்கள் ஸார். எனக்கு நேரமாகி விட்டது. ஒரு பாக்கெட் விற்றால் பத்துப் பைசா கிடைக்கும். பாவம், அக்கா! நான் இப்படிச் செய்கிறேன் என்று தெரிந்தால்.... ஆனால்...''

நான் இரண்டு பாக்கெட்டுகளை வாங்கிக் கொண்டு ஸ்கூட்டரில் ஏறுவதற்கும், புஷ்பா அன்றைய வியாபாரத்தை முடித்த விதத்தில் ஒரு வயதான வியாபாரியிடம் மீதமிருந்த பாக்கெட்டுகளைக் கொடுத்துச் சில்லறையைப் பெற்றுக் கொண்டு புறப்படுவதற்கும் சரியாக இருந்தது.

இதோ என் வீட்டில் என் அறையில் ஓர் ஊதுவத்தியைப் பொருத்திவிட்டு—

சிந்தனையோடு உட்கார்ந்திருக்கிறேன். வேலைக்காரர்கள் உட்பட வீட்டில் எல்லோருமே தூங்கி விட்டார்கள். என் அம்மா—அப்பா இல்லை — வழக்கப்படி என் 'கல்யாண வயதைப் பற்றி' அரை மணி நேரம் விவா

நித்துவிட்டுத் தன் அறைக்கு உறங்கச் சென்றுவிட்டாள்.

மணமணக்கும் அருமையான ஊதுவத்தி. தன்னை எரித்துக்கொண்டு மணத்தைப் பரப்புகிறது. வாடிக்கொண்டே மணம் வீசும் மலர் கரைந்து கொண்டே வாசம் கொடுக்கும் சந்தனம், புகைந்து கொண்டே இனிய நெடி தரும் அகில்... இவற்றைப் போல் அந்த ஊதுவத்தியும்...

படித்தவளான கிரிஜா தான் கடமைக்காகவே வாழ்கிறாள் என்று எண்ணிய அதே சமயத்தில் எரியும் இந்த ஊதுபத்தியின் மூலம் புஷ்பாவுக்கும் ஏதாவது கடமை இருக்குமோ என்று மனப் பிரமை.

கூடவே மாலையில் சீனியர் கிளார்க் வாசு இழுத்தாற்போல் கூறிய வார்த்தைகள் நெஞ்சைத் தொக்கி நின்றன.

ஒன்று நிச்சயம். புஷ்பா தன் அக்காவுக்குத் தெரியாமல் பணம் சேர்க்கிறாள். ஏன்? தன் திருமணத்துக்காகத் தன் அக்காளுக்கு ஏதோ தன்னாலான உதவியை மறைமுகமாகச் செய்ய வேண்டும் என்று அவள் விரும்பியதாலா?

கடற்கரையில் அவளைச் சுற்றிக் கூடி விருந்த கூட்டத்தைப் பற்றி நான் நினைக்கவில்லை. அந்தத் தூய்மையான அழகைச் சுற்றி எத்தனை கூட்டம் கூடினாலும் அந்த நெருப்பை அண்டமுடியாது என்பது எனக்குத் தெரியும். ஆனாலும் புஷ்பா ஏன் இப்படி?....

மறுநாள் அலுவலகத்தில் கிரிஜா வருவதற்குச் சற்று நேரம் ஆகும் என்று தோன்றியது.

என் இருக்கையில் உட்கார்ந்த நான் டிராயரிலிருந்து 'செக்' புத்தகத்தை எடுத்தேன்.

சொல்லி வைத்தாற்போல் வாசு என் அருகில் வந்தவர் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டுக் குனிந்து என் காதருகே—

''குமார்! விஷயம் தெரியுமா? இன்றைக்கு நம்ம சப்-ஹெட் வருவதே சந்தேகம்தான்.''

''ஏன் சார்?'' என்று திகைப்போடு கேட்டேன் நான்.

''இப்போதுதான் டெலிஃபோன் வந்தது. 'இரண்டு மணி நேரம் தாமதமாக வருவேன், அப்படி இல்லாவிட்டால் இன்று முழுவதும் வரமாட்டேன்' என்று சொன்னாளாம்...''

''இருக்கட்டுமே... அதனால் என்ன?''

''என்ன குமார், 'செக்' புத்தகத்தை விரித்து வைத்திருக்கிறீர்கள்? இதற்கு இப்போது அவசியம் இருக்காது... நேற்று ராத்திரி அவர்கள் வீட்டில் பெரிய கலாட்டாவாம். கல்யாணம் அநேகமாக நின்றே போயிற்று.''

''என்ன சொல்றீங்க வாசு?''

''நீங்க அந்தப் பெண்ணை நேற்று மெரினாவிலே பார்த்தீங்களில்லையா?''

''பார்த்தேன்.''

''அதே மாதிரி அந்தப் பையனும் — இவளைக் கல்யாணம் செய்துக்கிறதாகப் பெண் பார்க்க வந்தானே அந்தப் பையனும்—நேற்று மாலையில் மெரினாவில் பார்த்திருக்கிறான்...''

''அப்புறம்?''

''அப்புறம் என்ன? ஏதோ ஏழை ஆசிரியர் தள்ளிவிடலாம் என்று இந்த அம்மாள் இலேசாக எண்ணினால் முடியுமா? யாராக இருந்தாலும் அவரவருக்கு 'இது' என்று ஒன்று இருக்காதா என்ன?''

மேலே நான் அங்கே பேச்சைத் தொடர விரும்பாமல், வாசுதேவனுடன் அலுவலகக் 'கான்டீனில்' ஓர் ஓரத்துக்குச் சென்றேன்.

''ஏன் வாசு சார், ஒரு பெண் நாலு காசு சம்பாதிப்பதற்காக ஊதுபத்தி விற்றால் அது தப்பா?'' என்று கேட்டேன்.

''குமார்! நீங்கள் எல்லாம் இளவட்டம். நான் பத்தாம் பசலி. ஆனாலும் தனி மனிதனின் மனச்சாட்சி வேறு; சமுதாயத்தின் மனச்சாட்சி வேறு.''

''நாலு தனி மனிதன்தானே சார் ஒரு சமுதாயம் என்கிறது? அந்தப் பெண் எந்த ஒரு கடமையையாவது மனசில் வைத்துக் கொண்டு கடற்கரையில் அப்படி... உழைத்துப் பிழைப்பது தவறா சார்?''

நான் இப்படிக் கூறியதும் வாசு பெரிதாகச் சிரித்தார். அவர் மட்டுமென்ன, தத்துவங்களைப் பற்றிப் பேசும் சமுதாயம் சமயத்தில் ஒட்டுமொத்தமாகஇப்படித்தானேசிரிக்கிறது!

நானும் அவரும் என்னதான் பேசினால் என்ன? முந்தின நாள் இரவு கிரிஜா தன் வீட்டுக்குச் சென்ற கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அத்தனையும் நடந்து முடிந்தாகி விட்டதாம். அலுவலகத்தில் பல பேர்களிடமிருந்து எல்லாம் தெரிந்து கொண்டேன்.

அலுவலகம் எப்போது முடியும் என்று காத்திருந்தேன். பாண்ட் பையில் 'செக்'



## சாரதாவின் நடனம்

புதுச்சேரியில் பரதம் பயின்று சென்னை நடன ஆசிரியை ஸ்ரீமதி கௌசல்யாவிடம் தொடர்ந்து இக்கலையை அப்யசித்து வரும் குமாரி சாரதா வைத்தியநாதனின் பரதநாட்டிய நிகழ்ச்சி சமீபத்தில் பாலசுப்பிரமணிய சங்கீத சபையின் ஆதரவில் நடைபெற்றது. நிருத்தியபாகம் சுத்தமாகவும் தாளக்கட்டுடனும் அமைந்திருந்தது. முத்திரைகளும் அபிநயங்களும் துல்லியமாக இருந்தன. அப்பியாசம் குன்றாது தொடர்ந்தால் நடனங்களும் அபிநயங்களும் மெருகு பெறக் கூடிய அறிகுறிகள் சாரதாவின் கலையில் காணப்படுகின்றன.

புத்தகத்தைத் திணித்துக் கொண்டேன். கிரிஜாவின் வீட்டு விலாசத்தை அலுவலக ரெஜிஸ்தர் ஒன்றிலிருந்து பார்த்துத் தெரிந்து கொண்டேன்.

வாசுதேவன் என் ஸ்கூட்டருக்கு அருகில் வருவதற்கு முன்பு கிரிஜாவின் இல்லத்துக்கு விரைந்தேன்.

கிரிஜா என்னை எதிர்பார்க்கவில்லை. வீட்டில் நிலவிய அமைதி, புயலுக்குப் பிறகு ஏற்பட்டிருந்ததைப் போலிருந்தது.

''வாருங்கள், குமார்...'' ஒரு நாற்காலியைக் கூடத்தின் நடுவில் எடுத்துப் போட்டாள் கிரிஜா.

ஒரு நிமிட மௌனத்துக்குப் பிறகு—

''குமார்! உங்கள் உதவிக்கு இப்போதைக்கு அவசியமில்லாது போயிற்று. 'செக்' எழுதி விட்டீர்களா? எழுதி யிருந்தால், பாவம், ஒரு 'லீவ்' உங்களுக்கு நஷ்டம்.''

''என்ன சொல்கிறீர்கள் கிரிஜா?''

''என் தங்கையைத் திருமணம் செய்து கொள்ள அந்த ஆசிரியருக்குக் கொடுத்து வைக்கவில்லை...'' பெருமூச்சுடன் மிகவும் சமத்காரமாகக் கூறினாள் கிரிஜா.

''காரணம் என்ன என்று...''

''குமார்! நான் முன்பே சொல்லவில்லையா? இந்த வாழ்க்கை சுவையான சம்பவங்கள் நிறைந்தது என்று? வேறு யாராவது கேட்டிருந்தால் எதுவும் சொல்லி யிருக்க மாட்டேன். சொல்லியும் பயன் இல்லை. ஆனால் நீங்கள் என்னுடைய நிலைமையை ஓரளவு தெரிந்து வைத்திருக்கும் நீங்கள் — கேட்டு விட்டீர்களே? ஒரே வாக்கியத்தில் சொல்கிறேன். நீங்கள் நிச்சயம் புரிந்து கொள்வீர்கள்... வீட்டில்தான் ஒருத்தியைப் பெண் பார்க்க முடியும்; வெளியே ரோட்டில், சமுதாயத்தின் நடுவில் அவளைப் பார்க்க முடியுமா? எதற்கும் ஓர் இலட்சியம் காரணமாக இருந்தாலும், அதை ஏற்கும் பக்குவம்.... குமார்! இத்தனைதான் என்னால் சொல்ல முடியும். அந்தப் பையன் புஷ்பாவை ஏற்க மறுத்து விட்டான்.''

அப்புறம் அங்கு சிறிது நேரத்தில் எனக்குக் காப்பி கொடுத்தார்கள்.

நான் புறப்பட்டேன்.

''கொஞ்சம் இருங்கள், குமார்! இன்னும் இரண்டு நாட்களுக்கு என்னால் அலுவலகம் வர முடியாது. லீவு லெட்டர் தருகிறேன். டைரக்டருக்கு அனுப்பிவிடுங்கள்...''

உள்ளே சென்று லீவுக் கடிதம் எழுதி வந்தாள் கிரிஜா. அதைத் தன் கையில் வைத்துக் கொண்டே, ''புஷ்பா!'' என்று கூப்பிட்டாள்.

புஷ்பா மெதுவாக வெளியே வந்தாள். ''இந்தா, இதை ஒரு கவரில் போட்டுக் கொண்டு வா'' என்றாள். இரண்டொரு நிமிடங்களில் புஷ்பா கொண்டு வந்த அந்தக் கவரை என்னிடம் தந்தாள் கிரிஜா. நான் விடைபெற்றேன்.

இரவு மணி பதினொன்று.

என் மனத்தில் இனம் கொள்ளாத மகிழ்ச்சி நிறைந்திருக்கக் காரணம் என்ன?

என் அறையில் முந்திய நாள் நான் பொருத்திப் பாதியில் அணைந்திருந்த அந்த ஊதுபத்தியை மறுபடியும் பொருத்தினேன். நிமிடத்தில் மணம் 'கம்'மென்று அறை முழுதும் வியாபித்து விட்டது.

மணம் வெளியே மட்டும்தானா? உள்ளத்துக்குள்ளும் நிறைந்திருந்தது. ஏன் இப்படி?

வீட்டுக்கு வந்ததும் கிரிஜா கொடுத்திருந்த கவரின் உள்ளே லீவுக் கடிதத்துடன்—

''...அக்கா அடிக்கடி 'என் ஆபீசில் எனக்குக் கீழ் வேலை செய்யும் ஒருவரிடம் உன் கல்யாணத்துக்காகப் பணம் கடன் வாங்கப் போகிறேன்' என்று சொல்வாள். அது நீங்கள் தானா? நேற்று மெரினாவில் கடைசியாக என்னிடம் ஊதுபத்தி வாங்கியதும் நீங்கள்தான். அக்காவுக்குத் தெரியாமல் நான் அப்படிப் பணம் சேர்த்தது — அது இதுவரை ஐம்பது ரூபாய் ஆகியிருக்கிறது — ஏன்?

''அக்காவிடம் உண்மையைக் கூறியபோது 'அடி பாவி! இதற்காக உன் வாழ்க்கையையே பாழடித்துக் கொண்டு விட்டாயே' என்றாள். ஆனால் உங்களுக்கும் சொல்கிறேன். எங்கள் வீட்டில் ஸ்ரீராமர், சீதாதேவி விக்கிரகங்கள் உண்டு. எங்கள் அப்பா, அம்மா ரொம்ப நாட்களாக வழிபட்டு வந்த தெய்வங்கள். சீதாதேவியின் கழுத்தில் பொன்னால் தாலிச் சரடு ஒன்று உண்டு. அதை அக்கா ஒரு மிக இக்கட்டான சமயத்தில்....ஆமாம்! அது இருந்த இடத்தில் இப்போது மஞ்சள் முடிப் புத்தான் விக்கிரகத்தின் மேல் இருக்கிறது...

''என் கழுத்தில் தாலி ஏறும்போது அந்தச் சீதாதேவியின் கழுத்திலும்...அப்படி நான் எண்ணிச் செயல்பட்டது தவறா? தவறானால் நீங்களும் என்னை மன்னித்து விடுங்கள்! இன்னும் கொஞ்சம் ரூபாய் சேர்ந்திருந்தால் அரைப் பவுன் கிடைத்திருக்கும்... நீங்கள்— கடைசியாக நேற்று என்னிடம் ஊதுபத்தி வாங்கிய நீங்களும் — தெரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காகவே அதை அவசரம் அவசரமாக எழுதுகிறேன். —புஷ்பா.''

கடிதத்தைப் படித்த என் கண்ணில் மட்டுமா கண்ணீர்? அதை என் அன்னையிடம் காண்பித்தபோது அவளும் எப்படிப் பெருமையால் கண்ணீர் உகுத்தாள்!

இதோ ஊதுவத்தி எரிந்து கொண்டிருக்கிறது. அது அணைவதற்குள்...

வேகமாக — ஆனால் சுருக்கமாக — கிரிஜாவுக்கு எழுதினேன்:

''...என் அம்மாவுக்கும் இதில் பூரண சம்மதம். புஷ்பாவுக்கும் என்னைத் திருமணம் செய்துகொள்வதில் எந்த ஆட்சேபமும் இருக்காது என்று எண்ணுகிறேன். திருமணங்கள் சுவர்க்கத்தில் நிச்சயமாகின்றன என்று சொல்வார்கள். அவ்விதம் நிச்சயமாகும் இரு மணங்களுள் இதுவும் ஒன்று என்று நினைத்துக் கொள்ளுங்கள்.

இரண்டு நாட்கள் நன்றாக ஓய்வு எடுத்துக்கொண்டு அலுவலகம் வாருங்கள்.

மந்த்லி ஸ்டேட்மெண்டைக் கண்டிப்பாய் நாளை டைரக்டர் கையெழுத்துடன் ஹெட் ஆபீசுக்கு அனுப்பி வைப்பேன். இப்படிக்கு,

—குமார்.''

ஊதுபத்தியின் கடைசிச் சுடர் ஒளிவீசியது. ஆனால் மணமோ நிரந்தரமாக மனத்தில் ஒளிவீசத் தொடங்கிவிட்டது.

# வணக்கம் சௌக்கியமா?

(மயிலாப்பூரிலும் தியாகராயநகரிலும் பிரபலமாக விளங்கும் 'காபி ஸ்மால் ஹவுஸ்' பாத்திர விற்பனை நிறுவனத்தின் அதிபர் திரு சுந்தரத்தின் இல்லம்.

மயிலை நந்தி தெருவில் அமைந்துள்ளது. வாசலில் 'அம்பாசடர்' கார். மாலை நேரமாக இருந்ததால் வெளியே புறப்படவிருந்த திரு சுந்தரம் தம்பதி. திரு கோவிந்தராஜன் தம்பதியைக் கண்டதும் தங்கள் உத்தேசத்தை மாற்றிக் கொண்டு அவர்களை வரவேற்றனர்.)

லட்சுமி சுந்தரம்: வாருங்கள்! வாருங்கள்!

தேவசேனா கோவிந்தராஜன்: உங்கள் கடைக்குப் போய்விட்டுத்தான் இங்கே வருகிறோம். 'எவர்சில்வர் செட்'டுகளைப் பார்த்து விட்டு வந்தோம்.

லட்சுமி: ரொம்ப சந்தோஷம். இதில் வேடிக்கையான ஒரு பொருத்தம் இருக்கிறது. அடையாற்றில் பெண்களுக்காக நடத்தப்படும் பாலிடெக்னிக்கில் நீங்கள் இன்ஸ்ட்ரக்டர். மாணவிகளுக்குத் தையல் கலை போதிக்கிறீர்கள். பாத்திரத்துக்கும் துணிக்கும் சம்பந்தம் உண்டே!

தேவ (சிரித்தபடியே) : ஆமாம்! வீடுகளில் பழைய துணிகளைப் போட்டுப் புதிய பாத்திரம் வாங்குவார்கள்! சில சமயம் உற்சாகத்தில் புதிய துணிகளைக்கூடப் போட்டு விடுவது உண்டு. ஆனால் இப்போது பிளாஸ்டிக் சாமான்கள் கொடுக்க ஆரம்பித்து விட்டார்கள்.....

லட்சுமி: கால மாறுதல்! பெண்களின் உடையலங்காரங்களும் இப்போது மாறிவிடுகின்றனவே! முன்பு எப்படி இருந்தது. இப்போது எப்படி இருக்கிறது? ஒன்றுக்கொன்று சம்பந்தமேயில்லை.

தேவ: விலைவாசிகளும் அப்படித்தான். உங்கள் கடை ஆரம்பித்த காலத்தில் பித்தளை, செம்பு என்ன விலை? இப்போது என்ன விலை? மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருக்குமே ?

லட்சுமி: அந்தக் காலத்தில் பித்தளை சேர் கணக்கில் விற்றது. ஒரு சேர் விலை ஒரு ரூபாய். அப்புறம் பவுண்டு ஆறரை ரூபாயாச்சு...இப்போது கிலோ பதினாறு ரூபாயிலிருந்து பதினெட்டு வரைக்கும் போகும்.

செப்புப் பாத்திரங்கள் அன்று சேர் இரண்டரை ரூபாய். பின்னர் பவுண்டு ஒன்பது ரூபாய். இப்போது கிலோ இருபத்தேழு ரூபாய்.....

(கணவர் பக்கம் திரும்பியபடி 'நான் சொன்னது சரியாக இருக்குமா ?' எனக் கேட்கிறார் ஸ்ரீமதி லட்சுமி.)

சுந்தரம்: பவுன் விலையும் பாத்திர விலையும் என்னைவிட உனக்குத்தான் அத்துபடி! சந்தேகமே வேண்டாம்!

(ஹாலில் சிரிப்பொலி நிறைகிறது.)

லட்சுமி: இன்றைய இளந் தலைமுறையினரின் உடையலங்காரம் நம் நாட்டுப் பண்புக்கும் கலாசாரத்துக்கும் ஏற்றபடியாக இருக்கிறதா?

தேவ: சொல்லப் போனால் நாற்பது சதவீதம் அயல்நாட்டுப் பாணிகளைத்தான் காப்பியடிக்கிறார்கள். இத்தகைய உடைகளை அணிவதன் மூலம் பரம்பரை பரம்பரையாக வந்துள்ள கட்டுப்பாடுகளிலிருந்து விடுதலை பெற்றுவிட்டதாக ஒரு பிரமை. இத்தகைய நவநாகரிக உடைகள் தமிழ் நாட்டின் தொன்மையான பண்புக்கும் கலாசாரத்துக்கும் புறம்பானவைதாம். ஆனால் இதைச் சொன்னால் ஏற்கமாட்டார்கள். ஏன், என் பெண்ணே நாளைக்கு எப்படி உடையலங்காரம் செய்து கொள்வாளோ தெரியாது! பெண்களுக்கு எல்லா விஷயங்களிலும் இன்று சம அந்தஸ்தும் உரிமைகளும் இருக்கும்போது எதிலிருந்தோ விடுதலை பெறுவது போன்ற ஒரு பிரமைக்கு ஆளாகி இவ்வாறெல்லாம் உடை உடுத்த வேண்டிய அவசியமேயில்லை. இதில் இன்னோர் அம்சமும் இருக்கிறது. நாகரிகம் வளர வளர உடை மானம் காக்கத்தான் என்ற நிலை மாறி, கவர்ச்சிக்கும் தேவை என்று ஆகிவிட்டது.

அதிருக்கட்டும், பாத்திரக் கடை அதிபரின் மனைவியாச்சே நீங்கள்; உங்க வீட்டில் அடிக்கடி பாத்திரங்களின் எண்ணிக்கை கூடுமா? புதுப் பாத்திரங்களைக் கையாள்வதில் பெண்களுக்குச் சுபாவமாகவே ஆசை இருக்குமே?

லட்சுமி: நானும் ஒரு பெண் தானே! தேவைப்படும் பாத்தி

திரு கோவிந்தராஜன்



இவ்வாரம் உரையாடலில் பங்கு கொள்பவர்கள் :

**ஸ்ரீமதி தேவசேனா கோவிந்தராஜன்**

**ஸ்ரீமதி லட்சுமி சுந்தரம்**






திரு சுந்தரம்



''என்னங்க, நான் ஒரு ஐந்து ரூபாய் பரிசுச் சீட்டு வாங்கியிருக்கேன். குலுக்கல்லே பரிசு விழுந்தா ஒரு பெரிய எவர்சில்வர் 'கேரியர்' கிடைக்கும்....''
''பரிசு விழாது போனா?''
''எனக்கு அதே மாதிரி கேரியர் வாங்கித் தந்துடணும். ஆமாம் !'' -- ஸ்யா

ரத்தை வரவழைத்துக் கொள்வேன். ஆனால் கடை வைத்திருக்கிறாரே என்பதால் அவரிடம் அடிக்கடி கேட்பேன் என நினைக்காதீங்க !

தேவ: எனக்கும் பாத்திர ஆசை நிறைய உண்டு. சம்பளம் கைக்கு வந்ததும் மாதம் தவறாமல் புதிதாக எதையாவது வாங்கிக் கொண்டிருந்தேன். சிறிய வீட்டில் வைக்கக் கூட இடமில்லை! 'போதும் நிறுத்து' என்று என் கணவர் உத்தரவு போட்டார். 'ஸ்டாப்' பண்ணிட்டேன் !

ஆமாம், எவர்சில்வரில் சாதம் வடிப்பது சுகாதாரக் குறைவாமே? வெண்கலப் பானை, செப்புத் தவலை, மண் பானைதான் சாதம் வடிக்க ஏற்றதாம்? இப்படி ஒருவர் சொல்லக் கேட்டேன். உங்கள் கருத்து என்ன?

லட்சுமி: இது எவர்சில்வர் யுகம். அது சுகாதாரக் குறைவு என்றால், ஆஸ்பத்திரிகளில் எவர்சில்வரை அனுமதிப்பார்களா ? சஸ்திர சிகிச்சைக்கான உபகரணங்களைக்கூட எவர்சில்வர் பாத்திரங்களில் 'ஸ்டெரிலைஸ்' செய்கிறார்களே! எங்க வீட்டில் எவர்சில்வர் குக்கரில்தான் சமையல்..... எவர்சில்வரில் சாதம் வடிக்கக் கூடாது என்பதற்கு ஆதாரபூர்வமாகக் காரணம் யாரும் சொல்லிக் கேள்விப்படவில்லை !

ஒரு நடுத்தரக் குடும்பத்தில் துணிக்காக இப்போது என்ன செலவு செய்வார்கள் ?

தேவ. குறைந்தபட்சம் மொத்த வருமானத்தில் ஐந்தில் ஒரு பங்கு செலவு செய்யலாம் என நினைக்கிறேன். சம்பளத்தின் ஒரு பகுதியைப் பாத்திரச் சீட்டு கட்டவும் பயன்படுத்துகிறார்களே. இப்போது இந்தப் பழக்கம் எங்கும் பரவிவிட்டது இல்லையா?

லட்சுமி: நடுத்தரக் குடும்பத்தில் உள்ள பலருக்கு, பாத்திரத்துக்காக மொத்தமாகப் பணம் போட முடிவதில்லை. மாதா மாதம் கட்டி, வருட முடிவில் தேவைப்பட்ட பாத்திரங்களை வாங்கிக்கொள்கிறார்கள். பெண்கள் உள்ள குடும்பங்களில்தான் அதிகம் சீட்டு கட்டுகிறார்கள், கல்யாணச் சீரை உத்தேசித்து.

தையற்கலை பயின்று, டிப்ளமா வாங்கியும் கூட, பெண்கள் வியாபார ரீதியில் கடைகள் வைக்க ஏன் தயங்குகிறார்கள்?

தேவ: ஆண்களைப் போல் டைலரிங் கடைகளைப் பெண்கள் வைக்கத் தயங்கக் காரணம் பயம்தான். வீடுகளிலிருந்தபடியே ரவிக்கை, சோளி, கவுன், குழந்தை சட்டைகள் தயாரிக்கிறார்கள்.

எனக்குத் தெரிந்து பாலிடெக்னிக் மாணவியரில் இருவர் கடை வைத்துள்ளார்கள். திருவள்ளூரில் செல்வி மறைச்செல்வியும், தாம்பரத்தில் செல்வி மனுபாயும் தொடங்கி விட்டனர்.

அரசு கடன் உதவி அளிக்கத் தயாராக இருந்தும்கூட, பெண்கள் இந்த மாதிரி கடைகளைத் தொடங்கமாட்டேன் என்கிறார்கள்....துணிச்சல் வேண்டியிருக்கிறது, பிரச்னைகள் வருமானால் சமாளிக்க!

லட்சுமி : மாணவியரைப் பார்த்துத் திரைப்படநட்சத்திரங்கள் உடுத்துகிறார்களா? இல்லை, நட்சத்திரங்களைப் பார்த்து மாணவியர் உடையலங்காரம் செய்து கொள்கிறார்களா ?

தேவ: எனக்குத் தெரிந்தவரை நாகரிக உடையலங்காரத்தைத் திரைப்படங்களைப் பார்த்துத்தான் கற்றுக் கொள்கிறார்கள் என்பேன். அதோடு, நவநாகரிக யுவதிகளுக்கான ஆங்கிலப் பத்திரிகைகளும் உள்ளன.

கடையின் விற்பனை நிலவரம் பற்றி நீங்கள் உங்கள் கணவரைக் கேட்பதுண்டா ?

லட்சுமி: கேட்பேன்! சில சமயம் எவர்சில்வர் விலை சற்று இறங்கும். அப்போது நஷ்டப்பட நேருமோ என்று கவலைப்படுவேன். வியாபாரம்தானே எங்களுக்கு ஜீவநாடி !

அமெரிக்காவிலிருந்து உடையலங்காரம் பற்றிய ஏராளமான பத்திரிகைகளும், புத்தகங்களும் வருகின்றனவே.... அவற்றை வாங்கிப் பத்திரப்படுத்துவீர்களா?

தேவ: வெளிநாட்டிலிருந்து **Tailor and Cutter, Homes and Gardens, Needle Woman, Dress Designs** போன்ற பத்திரிகைகளை எங்கள் லைப்ரெரிக்காக வரவழைக்கிறோம். பல புத்தகங்களையும் வரவழைத்துள்ளோம். மாணவியருக்கு இவை யாவும் பயன்படும்.

தமிழிலும் பல புத்தகங்கள் வந்துள்ளன. பிரபல தையற் கலைஞர்களான சேகர், சுந்தரம் போன்றவர்கள் எழுதியுள்ளார்கள்.

பொதுவாகவே பெண்கள் பேரம் பேசும் இயல்புடையவர்கள் ஆயிற்றே. ஆயிரம் இரண்டாயிரம் என்று வாங்கினாலும் ஒரு நெய்க் கிண்ணமாவது கொசுறு கேட்பார்கள் இல்லையா ?

லட்சுமி: ஆகா! பெரும் பணக்கார வீட்டு அம்மாள்கூடக் கேட்காமல் இருக்கமாட்டாள். அதனால் அவர்கள் கேட்காமலேயே நாங்கள் கொடுத்து வருகிறோம். வெகு நாட்களாகவே எங்கள் கடையில் இந்த வழக்கம் உண்டு. ஆயிரம் ரூபாய்க்கு மேல் பாத்திரம் வாங்குவோருக்கு நினைவிருக்கும்படி ஒரு நல்ல பரிசு கொடுத்து விடுவோம்.

தேவ: நீங்கள் எங்கேயோ புறப்பட்டுக் கொண்டிருந்த சமயத்தில் வந்து சேர்ந்தோம். அதிகம் தாமதியாமல் கிளம்புகிறேன்.

லட்சுமி: இன்னொரு நாள் சாவகாசமாக வாருங்கள்.

(கோவிந்தராஜன் தம்பதி விடைபெற்றனர்.)

உரையாடல் தொகுப்பு: **ஏ. சுவாமிநாதன்**



# 1. பயண ஏற்பாடு

**சா**ருலதா திரைப் படத்தைப் பார்த்துவிட்டு மத்தியானம் மூன்று மணி அளவில் வெளியே வந்தார் 'அன்னம்' பத்திரிகையின் துணையாசிரியரான திருவாளர் பத்மநாபன். 'ஏர்கண்டிஷன்' செய்யப்பட்டுக் குளுகுளுவென்றிருந்த தியேட்டரை விட்டு வெளியே நூற்று மூன்று டிகிரி வெய்யிலில் அடியெடுத்து வைத்ததும் சித்திரவதைக்குள்ளானவர் போல் தவித்தார்.

இந்த வெய்யிலில் இனி பஸ்ஸைப் பிடித்து ஆபீசுக்குப் போவதென்பது உசிதமாகப்படவில்லை அவருக்கு. வீட்டுக்குப் போவது என்று தீர்மானித்த உடனேயே உஷ்ணமும் சற்றுத் தணிந்து விட்டதுபோல் தோன்றியது!

அவர் வீட்டுக்கு வந்து சேர்ந்தபோது மணி நான்கு. அம்புஜம், "யார் அது? இந்த வேளையில்....?" என்று முணு முணுத்தபடியே தரையில் விரித்துப் படுத்திருந்த புடவைத் தலைப்பை எடுத்துச் சரியாகப் போர்த்திக்கொண்டு வாசலுக்கு வந்தாள்.

கம்பிக் கதவு வழியாக வெளியே தன் கணவனின் உருவம் தெரிந்ததும் வியப்பும் மகிழ்ச்சியுமாக ஆணியில் தொங்கிய சாவியை எடுத்துப் பூட்டைத் திறந்தாள், "ஏது இன்னிக்கு இவ்வளவு சீக்கிரம்.....?" என்று கேட்டபடியே.

"கொஞ்சம் வெளியே போக வேண்டியிருந்தது. காரியம் முடிஞ்சப்போ மணி மூணு ஆயிடுத்து. நேரே வீட்டுக்கு வந்துட்டேன்."

"அது என்ன, உங்க ஆபீஸிலே ஏதாவது காரியம்னு சித்தெ வெய்யில் தாழ அனுப்பமாட்டாளா?"

"வெய்யில் உக்கிரமா இருக்குன்னு தான் அனுதாபப்பட்டுக் கொஞ்சம் ஏ. ஸி.யை அனுபவிக்கட்டுமேன்னு போகச் சொன்னாளோ, என்னவோ?"

"ஏ.ஸி.யா....?" என்று கேட்ட போதே சட்டென்று அம்புஜத்துக்குப் புரிந்து விட்டது! "மாட்னிக்குப் போயிட்டு வரேளா? அதை முதல்லேயே சொன்னால் என்ன?"

"எடுத்த எடுப்பில் சினிமாவுக்குப் போயிட்டு வந்தேன்னு சொன்னால் நீ, அவசரப்பட்டு அரங்கேறிய குழந்தை பரதநாட்டியம் ஆடுகிற மாதிரி குதிப்பியே! வீட்டுக்காரன் வேறே 'சுவரெல்லாம் வெடிப்பு விட்டுடுத்து; கண்டிராக்டர் ஏமாத்திட்டா'ன்னு நாளைக்கு ரெண்டு தரம் புலம்பிட்டுப் போறான்!"

"ஏன் நான் டான்ஸ் ஆடினா இடிஞ்சு விழாத மாதிரி உறுதியா சொந்தத்தில் நீங்க ஒரு வீடு கட்டுங்களேன்; யார் வேண்டாங்கறா?"

"சேச்சே! இந்தக் காலத்தில் யாராவது வீட்டிலே போய்ப் பணத்தைப் போடுவாளோ? பாங்கு வட்டிகூடத் தேறுது தெரியுமா?"

"லட்ச ரூபாயைக் கையிலே வைச்சுண்டு என்ன பண்றதுன்னு தெரியாமெ முழிக்கிற மாதிரிதான் உங்க பேச்சுக் கிழியறது!"

"நான் லட்சாதிபதியோ இல்லையோ; அம்புஜத்தின் அதிபதியா இல்லாட்டாலும் பதியா இருக்கேனே, அது போதாதா?" — பத்மநாபன் சட்டையைக் கழற்றி ஆணியில் மாட்டிவிட்டுக் கைகால் கழுவிக் கொள்ளக் குளியலறைக்குப் போனார்.

அம்புஜம் சிரிப்பை அடக்கிக்கொண்டு காஸ் அடுப்பில் வெந்நீர் கெட்டிலை வைத்துவிட்டு வந்தாள்.

"விமர்சனம் எழுதறேன் என்கிற சாக்கில் நீங்க மட்டும் வாரத்துக்கு மூணு சினிமா நாடகம்னு பார்த்துட்டு வந்துடறேள்."

"என் பிழைப்பே அதுதானே? அழைக்கிறவன் 'குடும்பத்தோடு வந்து அனுபவியுங்கள்' என்று சொல்றானா?"

"எல்லாம் நீங்க மனசு வைச்சா என்னையும் அழைச்சுண்டு போகலாம்."

"இதோ பார்! இன்னிக்கு நான் சினிமாப் பார்த்துட்டு வந்ததுக்காக நீ கோபப்படறது நியாயம் இல்லே. ஏன்னா இது உனக்குப் பிடிக்காத படம்."

"ஆமாம், அப்படிச் சொல்லித் தப்பிச்சுக்குங்கோ."

''இல்லே, அம்புஜம், இது உண்மையி லேயே ரொம்ப உசத்திப் படம்!''

''இதைத்தான் 'ஆடிங் இன்ஸல்ட் டு இன்ஜுரி'ன்னு நாலாவது ஃபாரத்திலே என் டீச்சர் சொல்லிக் கொடுத்தா.''

''அட இழவே, அதை நீ இன்னும் ஞாபகம் வைச்சுண்டிருக்கியா? இதுக்குத்தான் பெண்களைப் படிக்கவே வைக்கக் கூடாதுங்கறது. நான் சொல்ல வந்தது என்னன்னு பிரபலமா எல்லாருக்கும் பிடிக்கும்னு சத்யஜித் ரேயின் படத்தைத் தினசரி மூன்று காட்சிகள்னு போடாமல் மத்தியானம் பன்னிரண்டு மணி காட்சியாகத் திரையிடுவானேன்? அதுவும் வாரத்தில் ஒரே ஒரு நாள், ஒரே ஒரு காட்சி. அப்படி நாலே நாலு வாரத்துக்குப் 'புக்' பண்ணியிருக்கானும் புண்ணியவான் இந்தப் படத்தை!''

''அதென்ன, நண்பகல் காட்சி? சிவராத்திரிக்கு நள்ளிரவுக் காட்சி போடுவானே, அதற்குப் போட்டியா?''

''எவ்வளவு அசௌகரியமான நேரமானாலும் தரமான படங்களைப் பார்க்க ஆசைப்படுகிற தரமான ஆசாமிகள் சிரமத்தைப் பார்க்காமல் வந்துடுவா என்று தியேட்டர்க்காரனுக்கு நம்பிக்கை!''

''ஓகோ! உங்களைத் தரமான ஆசாமி இல்லேன்னு யாராவது நெனைச்சுண்டுடப் போறாளேன்னுதான் போனேளாக்கும்!''

''நீ தலைகீழா மாத்திச் சொல்லறே. பிறத்தியாருக்காக எத்தனையோ பாடாவதிப் படங்களைப் பார்த்தாச்சு; அவற்றைப் பற்றி எழுதியுமாச்சு. இதை எனக்காகப் போய்ப் பார்த்தேன். விமர்சனம் எழுதச் சொல்லி யாரும் கூப்பிடக்கூட இல்லே!''

''அதென்னவோ என்னையும் குழந்தைகளையும் எங்கேயாவது அழைச்சுண்டு போங்கோன்னு மட்டும் உங்களுக்கு எங்கிருந்தோ திடும்மென்று ஓர் அலுப்பு வந்துடறது.''

''இவ்வளவுதானே, உன் குறை? நாம எல்லாருமா சேர்ந்து ஜம்முன்னு கொடைக்கானலுக்குப் போயிட்டு வரலாம்; சரிதானா?''

சந்தோஷம் தாங்காமல், ''எப்போ, எப்போ?'' என்று வினவியபடி கணவனுக்குப் பக்கத்தில் இழைந்த மாதிரி ஊஞ்சலில் வந்து உட்கார்ந்து கொண்டாள் அம்புஜம். பத்மநாபனின் காதுகளின் பின்புறமும் கழுத்தின் பின்புறமும் ஜிவ்வென்று சூடேறிச் சிவந்தன.

அந்த இனிய துன்பத்தைத் தாங்க முடியாததால்தானோ என்னவோ அவர், 'கெட்டிலிலே வெந்நீர் தளைக்கிற சத்தம் கேட்கிறதே!'' என்றார்.

''உடனே நிறுத்திப்பிடுங்கோ! சித்தே சகஜமா இருக்கப்படாது!''

அம்புஜம் இறங்கிச் சமையலறைப் பக்கம் சென்றாள். பத்மநாபன் தமக்குள் சிரித்துக் கொண்டார்.

ஆயிற்று, இன்னும் ஒன்றிரண்டு மாதங்கள் போனால் அவர்களுக்குத் திருமணமாகி இருபது வருஷங்கள் பூர்த்தியாகப் போகிறது. அமெரிக்கக் கணக்குப்படி ''ஸெவன் இயர் இட்ச்'' மூன்று முறை ஏற்பட்டிருக்க வேண்டும். கல்யாணமாகி ஏழு வருஷங்களுக்குப் பின் கணவனுக்குப் பழகிய உருவத்தில் ஓர் அலுப்பும் புதிய உருவத்தை நாட வேண்டும் என்ற ஓர் அரிப்பும் ஏற்பட்டு விடுமாம்! இந்தக் கருத்தை மையமாகக் கொண்டு, செத்துப் போன மரிலின் மன்றோ நடித்த சினிமாகூட ஒன்று வந்ததே! ஆனால் பத்மநாபனுக்கு இப்படியெல்லாம் ஒரு சஞ்சலமும் ஏற்படவில்லை என்பதோடு நாளாக நாளாக அம்புஜத்தின் மீது அவருக்குப் பிரியம் வளர்ந்து கொண்டே போயிற்று. இது அவருக்கே சில சமயம் ஆச்சரியம் அளித்ததுண்டு. மணி மணியாக மூன்று குழந்தைகளைப் பெற்றுத் தந்தபின் அவளை முன்னைவிட மும்மடங்கு அதிகமாக நேசிக்க ஆரம்பித்தார். முன்போல் அவள் தலை பின்னிப் பூ வைத்துக்கொள்வதில்லை என்பதோடு கொண்டை போட்டுக் கொள்ள அவளுக்குச் சவுரி வேறு தேவைப்பட்டது. வேணியால் அதை அலங்கரித்தாள். ஆனால் பத்மநாபனுக்கும் இப்போதெல்லாம் கேசத்தைக் கொண்டை போட்டுக் கொண்டால்தான் பெண்களுக்கு அழகு என்றும் பின்னல் தொங்கினால் ஏதோ சிறுபிள்ளைத்தனமாக இருப்பது போலவும் தோன்றியது. அம்புஜத்தின் முகவாய்க்குக் கீழ் இரண்டாவது முகவாய் என்று சொல்லத்தக்க அளவுக்குச் சற்றுச் சதை எட்டிப் பார்த்தது இன்று. ஒடிந்து விழுகிற மாதிரி இருந்த காலம் மாறிச் சில ஆண்டுகளே ஆகிவிட்டன. இதோ, அவள் ஒரு பொய்க் கோபத்துடன் ஊஞ்சலிலிருந்து குதித்துக் கால்களைத் தரை அதிர எடுத்து வைத்துச் சமையலறை நோக்கி நடந்து போகிறாளே, அப்போது அவள் பின்புறத்தைப் பார்க்கையில், 'சற்றுப் பருமன்தான்' என்று சொல்லத் தக்க அளவிலேயே இருந்தாள். ஆனால் என்ன ஆச்சரியம்! அவள் ஒல்லியாக இருந்த காலத்தில், 'பெண்கள் கொடி போலத்தான் இருக்க வேண்டும்' என்று எண்ணிய பத்மநாபன், தற்போதெல்லாம் 'கொஞ்சம் பூசின மாதிரி இருந்தால்

தான் பெண்களுக்கு அழகு' என்று கருத ஆரம்பித்திருந்தார்! முன்பெல்லாம் அவள் அதிகமாகப் பேச மாட்டாள். அப்போது அவர், 'அடக்கம் தான் பெண்களுக்கு அணிகலன்' என்று எண்ணினர். ஆயின் இன்றோ அவள் அதிகமாகப் பேசுவது மட்டுமா? உரிமையுடன் வம்புக்கு இழுக்கிருள்; வாதாடுகிருள்; அவரைக் கிண்டல் பண்ணவே செய்கிருள்! அவரும் 'இப்படிக் கலகலப்பாக இருந்தால்தான் நன்ருயிருக்கிறது! ஊமையாக, உம்மணுமூஞ்சியாக இருந்து பயன் என்ன?' என்று நினைக்க ஆரம்பித்திருந்தார். மாறி மாறிச் சொற்சிலம்பம் பண்ணி விளையாடுவதில் ஓர் அலாதி ஆனந்தம். குழந்தைகள் சில சமயம் அம்மா கட்சி பேசும்; சில சமயம் அப்பா கட்சி பேசும். ஒரே கும்மாளம்தான்!.... வார்த்தைகளில் அனல் தெறிக்கும்; உள்ளங்களோ காலைப் பனி படர்ந்தாற்போலக் குளிர்ந்து கிடக்கும்.

அவர்கள் தனித்திருக்கும் போதோ இருபது வருஷங்கள் நெருங்கிப் பழகிய உரிமையில் அம்புஜம் சில சமயங்களில் அவர் திடுக்கிடும்படியான காரியங்களைச் செய்வாள். கதையோ, விமர்சனமோ, கட்டுரையோ அவர் மும்முரமாக எழுதிக் கொண்டிருக்கும்போது திடுதிப்பென்று பின்புறமாக வந்து அவர் கழுத்தைக் கட்டிக் கொண்டுவிடுவாள். சில தருணங்களில் அவர் சாய்வுநாற்காலியில் உட்கார்ந்து படித்துக்கொண்டிருக்கும் போது, 'என்ன படிக்கிறீர்கள்?' என்று அதில் ஆர்வம் காட்டுவது போல் நடித்து நாற்காலியின் கரத்தில் அமர்வாள்; சரேலென்று அப்படியே அவர் மடியில் நழுவி விடுவாள். இப்படியெல்லாம் நடந்துகொள்ளப் புதிதாக மணம் புரிந்து கொண்ட ஒருத்திக்கு எப்படித் தைரியம் வரும்? பழகப் பழகப் பாலும் புளிக்கும்; இருபது ஆண்டுகளில் தாம்பத்தியமும் அலுக்கும் என்று எந்த முட்டாள் சொன்னது?

நாளடைவில் பத்மநாபன் அம்புஜத்தினுடைய அன்பின் இந்தத் திமிர் விகசிப்புக்களை எதிர்பார்க்க ஆரம்பித்தார்; ஏன், அவற்றுக்காக ஏங்கவே கூடச் செய்தார். ஆனல் தாம் எதிர்பார்ப்பது போல் காட்டிக் கொள்ள மாட்டார். அவ்விதம் காட்டிக் கொண்டால் அந்த இன்பத்தில் ஒரு மாற்றுக் குறைந்துவிட்டது போல் உணர்ந்தார்.

இப்போதும் அவ்வாறேதான் அவர், 'கெட்டில் கொதிக்கிறது' என்று கூறி அவளை அனுப்பி வைத்தார். சமையல் கட்டுக்கு. எனினும், அவள் தன்னிடம் ஏமாற்றமடைந்துவிடப் போகிருளோ என்ற பயமும் பிடித்துக் கொண்டது அவரை. அவசரம் அவசரமாக, ''நீ பக்கத்தில் உட்கார்ந்திருந்தால் எனக்கென்ன முள்ளா குத்துகிறது? காப்பியைச் சாப்பிட்டுக் கொண்டே சாவகாசமாகப் பேசலாமேன்னு சொன்னேன், அவ்வளவுதான்'' என்ருர்.

''சாவகாசமா நீங்க உட்கார்ந்துண்டு பேசப் போறேளா? வானம் இருட்டிண்டு வரதா பாருங்கோ; வெளியே துணி காயறது.''

இதற்கு இடக்காகப் பதில் சொல்லப் பத்மநாபனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. அதனல் சும்மா ஊஞ்சலாடிய படி உட்கார்ந்திருந்தார். சற்று நேரத்தில் மணக்க மணக்கக் காப்பியுடன் வந்தாள் அம்புஜம்.

''நீ சாப்பிடலையா?''

''குழந்தைகள் வர நேரமாச்சு; அவாளுக்குக் கொடுத்துட்டுச் சாப்பிடறேன். நீங்க சொல்லுங்கோ, எப்போ கிளம்பறோம், கொடைக்கானலுக்கு?''





''பரீட்சையெல்லாம் முடிஞ்சதும் புறப்பட வேண்டியதுதான்.''

'' நிஜமாத்தான் சொல்றேளா ? பணத்துக்கு என்ன பண்ணுவேள்?''

''டோண்ட் வொர்ரி, கள்ள நோட்டு அச்சடிக்கப் போறதில்லே !''

'' அதுக்கு ரொம்பச் சாமர்த்தியம் வேணும் ; உங்களால் முடியாதுன்னு எனக்குத் தெரியும் ! கிடக்கு, சொல்லுங்கோ பணத்துக்கு நீங்க எங்கே போவேள் ?''

'' நீ இப்படிப் பக்கத்தில் வந்து உட்காரு, சொல்றேன் !''

''சித்தெ முன்னடி உட்கார்ந்தப்போ என்னைத் துரத்தி அடிச்சேளே ?''

'' அப்போ காப்பி எனக்குத் தேவையா யிருந்தது.''

'' ஆக, பெண்டாட்டியைவிடக் காப்பி தான் முக்கியம்?''

'' சந்தர்ப்பச் சூழ்நிலையையொட்டி ஒவ்வொன்றின் மதிப்பு கூடவோ குறையவோ செய்யறது. டிசம்பர் மாசத்திலே யாராவது கொடைக்கானல் போக நினைப்பாளா? இன்னும் அரை மணி, கால் மணியிலே குழந்தைகள் பள்ளிக்கூடம் விட்டு வந்துட்டான்னு உன்னைப் பக்கத்தில் வந்து உட்காரச் சொல்வேனு ?''

''காற்றுள்ள போதே தூற்றிக் கொள் !'' என்று சிரிப்பினூடே கூறிய



படி அம்புஜம் அவர் அருகில் வந்து அமர்ந்தாள்.

பத்மநாபன் சொன்னார்: "என் நாவல், 'சோலைக் குயில்' இருக்கோல்லியோ.....?"

"இல்லாமே என்ன? அதுதான் அலமாரி நிறைய அடுக்கி வைச்சுக் காட்டறுனே, புத்தகத்தைப் பிரசுரிச்சவன். எப்போ போய்க் கேட்டாலும் 'விற்கலே' பாட்டுத்தான்."

"அதுக்கென்ன பண்ணறது ? இந்தக் காலத்திலே மனுஷாளிடம் பணம் இல்லே. பணம் இருந்தாலும் புத்தகம் வாங்க மனம் இல்லே. பிளாக்கிலே ஐந்து ரூபாய் மேனிக்கு ஐந்து டிக்கெட் வாங்கிண்டு முதல் நாள், முதல் காட்சி சினிமாவுக்குப் போறுன். ஐந்து ரூபாய் கொடுத்து ஒரு புத்தகம் வாங்க மாட்டான். லைப்ரரிகளிலோ அரசாங்கம் ஒதுக்கற பணம், வேலை பார்க்கிற வாளுக்குச் சம்பளம் கொடுக்கவே சரியாப் போயிடறதாம். ஏன்னு, நூலகங்களின் எண்ணிக்கை அதிகமாப் போச்சாம். அப்படியே ஏதாவது புத்தகமோ மலரோ வாங்கினுலும் அதிலே அமைச்சர்கள் படம் ஏதாவது இருக்கான்னு முதல்லே பார்க்கிரு....."

"அது எப்படியோ போகட்டும். நீங்க விஷயத்துக்கு வாங்கோ."

"நீ எங்கே அதுக்கு அனுமதிக்கிறே ? நான் பசிக்கிறது சாதம் போடுன்னு ஆரம்பிச்சா நீ கோடியாத்துக் குப்பு மாமி ஏகாதசி விரதம் இருந்தன்னைக்கே செத்துப் போனுன்னு முடிச்சு வைச்சுப் பசியை விரட்டிப் பிடறே !"

"சரி, நான் விரட்டறதும், புரட்டறதும் கிடக்கட்டும்; நீங்க சோலைக் குயிலைப் பத்திக் கூவுங்கோ !"

"சோலைக் குயிலை இந்திய நாட்டின் பதினுலு பாஷைகளிலும் மொழி பெயர்த்து....."

"பதினுலு அலமாரிகளில் அலங்காரமா அடுக்கி வைக்கப் போருளாக்கும்; விற்கலேன்னு !"

"பதினுலு என்ன, மகராஜனு இருபத்து நாலு அலமாரிகளிலே வேணுமானுலும் அடுக்கிண்டு போகட்டும். நமக்கென்ன ? எத்தனைக்கெத்தனை விற்காமல் இருக்கோ அத்தனைக்கத்தனை அது உசத்திப் புஸ்தகம் என்பது உறுதியாகும் இல்லையா ?"

"உறுதியாகணும்னு அட்டைக்குப் பதில் இரும்புத் தகட்டைப் பயன்படுத்திப் பைண்டு பண்ணச் சொல்லுங்களேன் ! கிடக்கு, இதுக்கும் நம்ம கொடைக்கானல் பயணத்துக்கும் என்ன சம்பந்தம் ?"

"இருக்கு அம்புஜம்; பதினுலு மொழிகளிலே பெயர்க்கும் உரிமையை வாங்கிண்டு, அதற்காகத் தேசிய புத்தக நிறுவனத்திலே எனக்கு மூவாயிரம் ரூபாய் கொடுத்திருக்கா !"

அம்புஜம் பதில் பேசவில்லை.

பத்மநாபன் அப்படியே அவள் தோள்களை அணைத்துக் குலுக்கி எடுத்தார், உற்சாக மிகுதியில். "அப்பாடா ! முதல் தடவையா உன்னை வாயடைச்சுப் போகப் பண்ணிட்டேன் பார்த்தியா?" என்ருர்.

"ஆமாம், மூவாயிரம் என்றதும் நம்முடைய அத்தியாவசியத் தேவைகளெல்லாம் வரிசையா கியூவிலே வந்து நிற்க ஆரம்பிச்சுடுத்து, கண்ணெதிரே. நல்ல காலம் பொறக்கும்னு இருபது வருஷமா ஒத்திப் போட்டுண்டிருக்கோமே ? முதல்லே இரும்பு பீரோ ஒண்ணு, அப்புறம் ஒரு வெந்நீர் பாய்லர்....."

"சேச்சே ! நம்முடைய தேவைகள் தாம் முடிவில்லாத பட்டியலா என்றைக்குமே இருந்திண்டிருக்கே அம்புஜம். அதெல்லாம் அப்புறம் பார்த்துக் கொள்ளலாம். ஆயிரம் ரூபாய் கடனை அடைச்சுடறேன். பாக்கி ரெண்டாயிரத்துடன் ஒரு மாசம் லீவு போட்டுட்டுக் கிளம்பறேன். ஹாய்யா கொடைக்கானல் போய் ரெண்டு வாரமோ மூணு வாரமோ இருந்துட்டு வருவோம். போற இடத்திலே ஒரு கவலை இருக்கப் படாது ; செட்டு சிக்கனம்னு பேசப் படாது. முதல் வகுப்பு ரயில் பயணம், முதல்தரமான ஹோட்டல் வாசம் ; குழந்தைகள் கேட்கிறதை வாங்கித் தரணும்; டாக்ஸியில் நினைச்ச இடமெல்லாம் போய்ச் சுற்றிப் பார்க்கணும்."

"ஆக பத்துப் பதினைஞ்சு நாளைக்குப் பணக்காரனாஇருப்போமேங்கறேள்!"

"ஆமாம், இரண்டாயிரத்துக்கும் ஒற்றை ரூபா நோட்டுக்களா வாங்கி வைச்சுண்டு இடது கையாலும் வலது கையாலும் வாரி விடப் போறேன்."

"அதுவும் வாஸ்தவம்தான் ; கொடைக்கானலில் கோடை விடுமுறையைக் குழந்தைகளோடு போய் அனுபவிக்கிறதுன்னு தீர்மானிச்சாச்சு. அப்புறம் செலவு பண்ணப் பயந்துண்டே இருந்தால் சந்தோஷத்திலே பாதியை அது சாப்பிட்டுவிடும். இங்கே தான் பைசாக் கணக்குப் பார்க்கிறேமே, அங்கே போய் வேறே எதுக்கு நம்ம தரித்திரத்தைக் காட்டணும் ?"

"நினைக்கிறச்சேயே ஜிலுஜிலுக்கிறது அம்புஜம்" என்று அவள் காதருகே போய் ரகசியம் பேசும் குரலில் அவர்

சொன்னபோது, தொனித்த அன்பையும் துடித்த இதழ்களையும் மிருதுவாய்ப் படிந்த மூச்சுக் காற்றையும் அவள் ஒரே சமயத்தில் உணர்ந்து சிலிர்த்து நெளிந்தாள்.

''அம்மா ! அம்மா !'' என்று வாசலில் குரல் கேட்டது.

''காலேஜ் விட்டு மீனு வந்தாச்சு'' என்று கூறி, தன்னைச் சரேலென்று விடுவித்துக் கொண்டு வாசலுக்கு விரைந்தாள் அம்புஜம்.

இந்த இடையூறினால் பத்மநாபன் ஏமாற்றமடையவில்லை. அம்பாக அவள் விடுவித்துக் கொண்டு போனாலும் சற்று நேரம் பொறுத்து அந்த அம்பு திரும்பவும் அம்புறாத் தூணியில் வந்து அடைக்கலமாக அமர்ந்துவிடும் என்பது அவருக்குத் தெரிந்ததுதானே ?



## 2. "ஸைக்கோ ஸாரநாதன்"

ரயில் கிளம்ப இன்னும் அரை மணி நேரம் இருந்தது.

''உட்கார்ந்திருங்கோ, சாயங்காலப் பேப்பர் கிடைக்கிறதான்னு பார்த்துண்டு வரேன்'' என்று சொல்லிவிட்டுப் பெட்டியிலிருந்து கீழே இறங்கினார் பத்மநாபன்.

''ஃபஸ்ட் கிளாஸிலே ரிஸர்வ் பண்ணிட்டு இத்தனை சீக்கிரம் வரவேணுமா?'' என்றாள் மீனு அலுத்துக் கொள்பவளாக.

''உன் அப்பாதான் ஐந்து மணியிலேயிருந்து பறந்துகொண்டிருந்தாரே? மூணாங் கிளாஸிலே முண்டியடிச்சு ஏறின பழக்கம் நம்மை எங்கே விடும்!'' என்று அம்புஜம் மகளுக்குப் பதில் சொன்னாள்.

இதைக் காதில் வாங்கிக் கொள்ளாதவர் போல் கீழே இறங்கிச் சென்று 'மெயில்' பேப்பர் வாங்கிக் கொண்டு திரும்பினார் பத்மநாபன். பிளாட்ஃபாரத்தில் நின்றபடியே பிரித்து ஓர் உதறு உதறிப் படிக்கத் தொடங்கிய சமயம், இரண்டாவது பெண் அனுசூயா 'அப்பர் பர்த்'திலிருந்து கீழே இறக்கி விடச் சொல்லித் தாயாரைக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

''இந்தாடி, அனு! எதுக்கு இப்படி என்னைப் படுத்தறே? அப்பர் லோயர்ன்னு மாறி மாறி எட்டு தரம் ஏறி இறங்கியாச்சு !''

''நான் எங்கே எட்டுத் தரம் ஏறினேன். இதோடே ஏழு தடவைதான் ஆச்சு'' என்று விரல்களைப் பிரித்துக் காட்டினாள் அனு

''தம்பி நர்ஸரி ரைம் சொல்றானே இல்லியோ 'கூஸி கூஸி காண்டர்'னு; அது ஞாபகம் வந்திருக்கும். அதான் 'அப்ஸ்டேர்ஸ் அண்டு டவுன் ஸ்டேர்ஸ்'னு ஏறி இறங்கிண்டே இருக்கா!'' என்றாள் மீனு.

''நான் ஒண்ணும் 'கூஸி கூஸி காண்டர்' இல்லே; நீதான 'பெர்ஷியன் கேட்' !''

''சீ, போ! ஏதாவது உளறாதே!''

''நான் ஏன் உளறப்போறேன்? உன் காலேஜ் பிரெண்ட்ஸ் அப்படித்தானே பேர் வைச்சிருக்கா உனக்கு?''

'பாரசீகப் பூனை!' — தினசரி படித்துக் கொண்டிருந்த பத்மநாபன் தமது கவனம் திருப்பப்பட்டதாகக் காட்டிக் கொள்ளாமலே ஒரு முறை தம் மூத்த மகளை நோட்டம் விட்டார். 'பாரசீகப் பூனை!' நன்றாகத்தான் பெயர் சூட்டியிருக்கிறார்கள்! உருண்டை முகம், கதுப்புக் கன்னங்கள். கண்கள் அதிக நீளமில்லை; அகன்று ஏறத்தாழ வட்ட வடிவில் இருந்தன. அவற்றில் திருப்தியும் அமைதியும் ததும்பிக் கொண்டிருந்தன. அது போகட்டும், அவள் உட்கார்ந்திருக்கும் நிலையைத்தான் பார்ப்போமே என்றால் அதிலும் பெயர்ப் பொருத்தம் இருக்கவே செய்தது. கால்களைத் தூக்கி ஒருக்களித்த மாதிரி மடக்கிக் கொண்டு ஒரு மூலையில்

சுருண்டாற்போல் சாய்ந்து அவள் நாவல் படித்துக்கொண்டிருப்பதானது ஒரு பூனை சோபாவில் சொகுசாகப் பதுங்கிப் படுத் திருப்பது போல்தான் தோன்றியது.

அவள் 'எனிட் பிளேட்டன்' பருவத்தைத் தாண்டி 'டெனிஸி ராபின்ஸ்' பருவத்தை அடைந்திருந்தாள். அவள் படித்து அடுக்கியிருக்கும் டெனிஸி ராபின்ஸ் நாவல்கள் ஐம்பதோ அறுபதோ இருக்கும்.

'திரும்பத் திரும்ப இந்த டெனிஸி ராபின்ஸ்தானா? நான் உன் வயசிலே ஸ்காட்டையும் டூமாஸையும் ஆர்க்ஸி யையும் படிச்சு முடிச்சாச்சு' என்று சொல்லத் தோன்றியதுண்டு பத்மநாப னுக்கு. பிறகு, 'வேண்டாம், அவள் ரசனை தானாகவே மாறும்' என்று பேசாமல் இருந்துவிட்டார். 'ஒரு காலத் தில் பெர்ரி மேஸன் கதைகள் எத்தனை படித்துப் போட்டிருக்கிறோம்? இப்போ படிக்கத் தோன்றுகிறதா? கிரஹாம் கிரீன், ஓஹாரா, ஸ்டீன்பெக் என்று தானே, லைப்ரரியிலும் புத்தகக் கடையி லும் தேடி எடுக்கிறோம்?'

மீனு இந்தக் காலத்துக் கல்லூரிப் பெண்கள் பலரைப் போல், ஜீன்ஸ், லுங்கி, ஸ்ட்ரெச் பாண்ட், ஸல்வார் கம்மீஸ், பெல்பாட்ஸ் என்றெல்லாம் இறங்காமல் புடவை உடுத்துகிறாளே, அதுவே தெய்வ அனுக்கிரகம் என்று ரொம்பத் திருப்தியாகவும் சந்தோஷ மாகவும் இருந்தது அவருக்கு. அவளை அதிகமாகத் திருத்த வேண்டிய அவசியம் நேர்ந்ததில்லை. புத்தி சொல்லும்படி யாக அவள் நடந்து கொண்டதில்லை. இதனாலெல்லாம் பெற்றோருக்கு அவ ளிடம் அன்பு பெருகியதுடன் அவள் சிறியவளேயானாலும் மதிப்பும் மிகுந் திருந்தது. கோலம் போட்டது போல் அவள் பல டிசைன்களில் நெற்றிக்கு இட் டுக் கொள்ள மாட்டாள். புடவைக்கு 'மாட்ச்' ஆகிறதோ இல்லையோ பளிச் சென்று சிவப்புக் குங்குமப் பொட்டுத் தான். வேறு நிறம் கிடையாது. அத னால் அழகு என்ன குறைந்தா போய் விட்டது? வானுலகச் சந்திரனும் பூவுலக ரோஜாவும் நீருலக அன்ன மும் லேடஸ்ட் ஃபாஷனையா கண்டன? ஆனால் அவை அழகில்லை என்று யாரா வது சொல்லிவிட முடியுமா? மீனு வுடைய அழகு அத்தகையது — அடக்க மானது, சாந்தி அளிப்பது.

அனுதான் பெரிய வாயாடி. விஷம மும்கூட. 'எப்படி அவளைத் திருத்தப் போகிறோம்?' என்ற கவலை பல சந்தர்ப் பங்களில் பத்மநாபனை ஆட்கொண்ட துண்டு. ''போகப் போகச் சரியாகி விடும். கவலைப்பட வேண்டாம்'' என்று அம்புஜம் சொல்வாள். அதிலும் விசு பிறந்த பிறகு அவள் பிடிவாதம் அதிக மாகியிருக்கிறது.

விசுப் பயலுக்கு மூன்று முடிந்து ஆறு மாதங்களாகப் போகிறது. தலை யைத் தடவித் தடவி, ''திருப்பதி கோவிந்தா!'' என்கிறான் அடிக்கடி. கொடைக்கானல் குளிரில் பாதிக்கப் படாமல் இருக்க மொட்டைத் தலைக்குக் கம்பளிக் குல்லாய் வாங்கியிருந்தாள் அம்புஜம். ஆறேழு வாரங்கள் ஆகிவிட் டன; இன்னும் ஒரு மாசம் போனால் தலை வாரலாம் அவனுக்கு.

இப்போதே புதுச் சொக்காய் போட் டால்தான் ஆயிற்று என்று அவன் தாயாரை நச்சரித்துக் கொண்டிருந் தான். ''அடேய்! அது புதுச் சொக்காய் இல்லேடா, ஸ்வெட்டர்! மலை மேலே குளிரும் போது போட்டுக் கொள்ள ணும்; இப்போ போட்டுண்டால் வேர்த் துக் கொட்டும்'' என்று அம்புஜம் சொல்லிப் பார்த்ததில் பயன் இல்லை.

''கொட்டட்டும், நன்னா வேர்த்துக் கொட்டட்டும்!'' என்று அவன் கோபத் துடன் அழுத்தந்திருத்தமாய்க் கூறினான்.

இவற்றை யெல்லாம் அரைகுறை யாகப் பார்த்துக் கொண்டும் கேட்டுக் கொண்டும் பத்மநாபன் பத்திரிகைத் தலைப்புச் செய்திகளில் கண்ணோட்டம் செலுத்தியபடி இருந்தார். திடீரென்று அவரது முழுக் கவனத்தையும் ஈர்க்கும் விதமாகச் செய்தி ஒன்று அவர் கண் களில் தட்டுப்பட்டது. ''ஸைக்கோ ஸாரநாதன் போலீஸ் பாதுகாப்பி லிருந்து தப்பினான்'' என்ற தலைப்பைப் படித்ததுமே அவருக்குச் சுற்றுச் சூழ் நிலை எல்லாம் மறந்து போயிற்று. நாளிதழில் அச்சம்பவத்துக்கு அதிக முக் கியத்துவம் தரப்படவில்லை. ஆனால் பத்மநாபனுக்கு என்னவோ உலகச் செய்திகளெல்லாம் ஏற்படுத்தாத பர பரப்பையும் சுவாரசியத்தையும் கட்டம் கட்டிப் போட்டிருந்த இந்தச் சிறிய நிகழ்ச்சி அளித்தது. அவர் கண்கள் அந்தச் செய்தியைப் படிக்க, மனம் ஸைக்கோ ஸாரநாதனைப் பற்றிய எண் ணங்களில் லயித்தது.

* * *

**ப**ம்பாயில் ஸைக்கோ ஸாரநாதன் பதினாலு ஆண்டுகளில் மொத்தம் நாற்பத்திரண்டு கொலைகள் புரிந் திருப்பதாகப் போலீஸார் கருதுகின்ற னர். பல வருஷங்களாக அவன் பிடி படவேயில்லை. கடைசியில் அவன் போலீஸாரிடம் அகப்பட்டுக் கொண்ட போது, கடைசி மூன்று ஆண்டுகளில் நடந்த ஒன்பது கொலைகளுக்கு மட்டுமே

# 100% இயற்கை

பதினெட்டு
அபூர்வ மூலிகைகளைக்
கொண்டு
தயாரிக்கப் படுவது
விக்கோ

## வஜ்ரதந்தி

பிரபல ஆயுர்வேத பற்பசை மற்றும் பல் பொடியான விக்கோ வஜ்ர தந்தி 18 அரிய மூலிகைகளிலிருந்து தயாரிக்கப்படுகிறது இம மூலிகைகளின் தனிப்பட்ட குணங்கள் யாவரும் நன்கு அறிந்ததே. ஆனால் குறிப்பிட்ட அளவுகளில் இவற்றைக் கலக்கும்போது அவற்றின் குணத்திறன் அதிகமாகிறது. விக்கோ வஜ்ரதந்தியின் தற்போதைய செய்முறை பல்லாண்டு ஆராய்ச்சியின் விளைவாகும்.

தவறாது விக்கோ வஜ்ரதந்தி உபயோகித்தால், பற்சிதைவு, பயோரியா, ஈறுகளிலிருந்து சீழ் மற்றும் இரத்தம் வருதல், மூச்சிலே துர் நாற்றம் முதலியவை தடுக்கப் படுகிறது.

ஒரு முறை உபயோகித்துப் பாருங்கள் உண்மை புரியும்.

ஆயுர்வேத
பற்பசை மற்றும்
பற்பொடி.
வாய் ஆரோக்கியத்துக்கு
ஒப்பற்றது.







விக்கோ லாபரெட்டரீஸ்
தாதர், பம்பாய்-14

TML

அவன் மீது வழக்குத் தொடுத்தார்கள். மற்றக் கொலைகள் நடந்து ரொம்பக் காலம் ஆகிவிட்டபடியால் அவன் மீது கேஸ் ஜோடிக்கத் தக்க தடையங்கள் ஏதும் அகப்படவில்லை. ஆயின் என்ன, மூன்றுண்டுகளில் நடந்த ஒன்பது கொலைகளை அவன் செய்ததாக நிருபித்தால் போதாதா? ஒன்பது தடவை அவனைத் தூக்கிலே போடலாமே! இந்த எண்ணத்தில்தான் மகராஷ்டிர அரசு அவன் மீது வழக்குத் தொடுத்தது.

ஆனால் போலீஸார் சற்றும் எதிர் பாராத சில திருப்பங்கள் வழக்கு ஆரம்பமானபோது உருவாயின. ஸாரநாதன் சார்பில் வழக்காட யாரும் இல்லை. வக்கீலுக்குத் தரத் தன்னிடம் பணம் இல்லை என்று அவன் கூறிவிட்டான். அப்போது கோர்ட்டாரே அவனுக்காக ஒரு வழக்கறிஞரை நியமிக்க முன் வந்தார்கள். ஒருவன் குற்றவாளி தான் என்பது நூற்றுக்கு நூறு சந்தேகமின்றி நிருபிக்கப்படலாம் என்றாலும் கூட அவனுக்கு வழக்காடச் சந்தர்ப்பம் அளிக்கப்பட வேண்டும் என்று சட்டம் சொல்கிறது.

இந்தச் சமயத்தில் பானர்ஜி என்பவர் திடும்மென்று கறுப்புக் கோட்டுடன் கோர்ட்டில் எழுந்து நின்று ''மைலார்ட்! குற்றவாளி சார்பில் நான் வழக்குரைக்க அனுமதி வழங்க வேண்டும்'' என்றார்.

நீதிபதி ஒரு புன்னகையை அடக்கிக் கொண்டார். பானர்ஜி முன்னுக்கு வந்து கொண்டிருந்த இளம் வழக்கறிஞர். இந்தக் கேஸில் தாம் சம்பந்தப் பட்டால் ரொம்பவும் பிராபல்யம் அடையலாம் என்பதைக் கருதியே வந்திருக்கிறார் என நீதிபதிக்குப் புரியாமல் இல்லை. ஆனால் பானர்ஜி, நீதி தேவதைக்குத் தம்மால் இயன்ற காணிக்கையைச் செலுத்தத் தாம் முன்வந்திருப்பது போலவே நடந்து கொண்டார்! ஸாரநாதனும், அந்த வழக்கும், நடந்த கொலைகளும் ஒருபுற மிருக்கட்டும். இவற்றையெல்லாம்விட முக்கியமான விஷயம், குற்றம் சுமத்தப்பட்ட ஒருவனுக்குத் தன் சார்பில் வழக்காட உரிமை உள்ளது; அந்த உரிமை காப்பாற்றப்பட வேண்டும் — இந்தப் பெரு நோக்குடன் தாம் ஸாரநாதனின் வக்கீலாக இருக்க ஒப்புக் கொள்வது போல் காணப்பட்டார் பானர்ஜி!

ஸாரநாதனை இதுபற்றிக் கேட்ட போது அவன் ரொம்ப அலட்சியமாகச் சூள் கொட்டித் தலையாட்டி வைத்தான். தன்னால் பணம் கொடுக்க முடியாது என்னும்போது வந்து வாய்க்கிற வக்கீல் எவனாயிருந்தாலென்ன, பைசா பெயர்வதாயிருந்தாலல்லவோ பெரிய வக்கீல்,

இம் மாத நாவல்

மகரிஷி எழுதும்

ஒண்பழ

26.3.1972

கத்துக்குட்டி வக்கீல் என்றெல்லாம் யோசனை பண்ண வேண்டும்?

நீதிபதி, பானர்ஜியைத் தம் அருகில் அழைத்தார். ''நாற்பத்திரண்டு கொலைகளைப் புரிந்ததாகக் கருதப்படுபவன் சார்பில் வழக்காடுகிறாய் என்பதால் உனக்கு அவப் பெயர்கூட வந்து சேரலாம், அதை உணர்ந்திருக்கிறாய் அல்லவா?'' என்று கேட்டார்.

''நன்றாக உணர்ந்திருக்கிறேன். அதற்கும் துணிந்துதான் வந்திருக்கிறேன்'' என்றார் பானர்ஜி.

இப்போது நீதிபதிக்கு அவரிடம் நம்பிக்கை ஏற்பட்டது. பிரபலமடைய ஒரு வழி என்ற எண்ணம் ஒரு பக்கம் இவனுக்கு இருக்கலாம்; ஆனால், வழக்கை முழுமூச்சுடன் நடத்தி இறுதி வரையில் போராடுவான் என்பது நிச்சயம் என்று உணர்ந்தார். ஸாரநாதனுக்கு அவரையே வழக்கறிஞராக நியமித்து வழக்கைச் சில வாரங்களுக்கு ஒத்திப் போட்டார்.

பானர்ஜி கடமையால் உந்தப்பட்டுக் காரியம் செய்வதுபோல் ஆரம்பத்தில் நடித்தாலும் போகப் போக அவருக்கு மெய்யாலுமே தாம் மேற்கொண்ட பணியில் ஆழ்ந்த ஈடுபாடு ஏற்பட்டுவிட்டது. நாற்பத்திரண்டு கொலைகள் என்ன, அதற்கு அதிகமாகவே ஒன்றிரண்டு கொலைகளை ஸாரநாதன் செய்ததாகக் கூறப்பட்டால்கூட அவனை விடுவிக்க வேண்டும் என்று உறுதியாக நினைத்தார். 'இந்தக் கொலைகளை ஸாரநாதன் செய்யவே இல்லை; அவனுக்குள்ளிருந்த இன்னொரு ஆன்மா இவனை ஆட்டிப் படைத்தது. அதன் கருவியாக இவன் விளங்கினான். அவ்வளவே' என்று நிச்சயித்துக் கொண்டார். இப்படிப்பட்ட முடிவுக்கு அவர் வரக் காரணமாயிருந்தவர் டாக்டர் குஹா.

**டா**க்டர் குஹா, டாக்டர் பட்டம் பெற்ற டாக்டர்; அல்லது 'டாக்டர்

ஸ்கொயர்டு'. அதாவது டாக்டராகிய இவர், பல ஆராய்ச்சிகள் செய்து டாக்டர் பட்டம் பெற்றார். ஒன்றுக்கு இரண்டாக டாக்டர் பட்டம் பெற்றும் தம்மைக் கலைஞர் என்று வர்ணித்துக் கொள்வதிலேதான் இவருக்கு ஆசை! மருத்துவமே ஓர் அற்புதக் கலை என்பார். ஆகவே, இவரைக் ''கலைஞர் டாக்டர்'' என்று சொல்லலாம்!— நியூராலஜியில் (நரம்புச் சிகிச்சை) விசேஷத் தேர்ச்சி பெறத் தொடங்கி ஸைக்கியாட்ரி (மன நோய் மருத்துவம்) வரை வந்து அத்துடன் பட்டங்களுக்கெனப் படிப்பதை முடித்துக் கொண்டவர். ஆனால் படிப்பதை நிறுத்தியவரல்ல.

அமெரிக்காவில் இவர் மான்யம் பெற்று ஆராய்ச்சிகள் செய்தார். அதன்பின் அங்கேயே சில காலம் தொழில் நடத்தினார்.

கணவன் தினம் இரவு இரண்டு மணிக்கு மேல் வீடு திரும்புவதால் தன் தலையெல்லாம் நரைத்துப் போவதாகச் சொல்லிக் கொண்டு வருவாள் மனைவி, மனோதத்துவ நிபுணரான அவரிடம். 'உன் தலை நரைத்துப் போனதால்தான் அவன் தினம் இரவு இரண்டு' மணிக்கு வருகிறான்; உன்னைவிட வயதில் சிறியவனை நீ கல்யாணம் பண்ணிக் கொண்டது பிசகு' என்று எடுத்துரைத்துச் சமாதானப்படுத்தி அனுப்புவார்.

இன்னும் 'பக்கத்து வீட்டு நாய் என்னைப் பார்க்கும்போதெல்லாம் ஏன் குரைக்கிறது?' என்று கேட்டுக் கொண்டு வருபவன், சென்ற வருஷத்தைவிட இந்த ஆண்டு நிறுவனத்தில் லாபம் குறைந்துவிட்டதே என்று கவலைப்பட்டுக் கொண்டு வருபவன், மாமியாரைப் பார்க்கும்போதெல்லாம் அவள் கழுத்தை நெரித்துக் கொன்றுவிட வேண்டும் போலிருக்கிறதே என்று பதறியபடி வருகிறவன் என்று இவ்வாறு பலதரப்பட்ட மனிதர்களுக்குச் சிகிச்சை செய்து அனுப்பினார்.

அவ்வப்போது பாரத நாடு பற்றிய செய்திகளையும் பத்திரிகைகளைத் தருவித்துப் படித்துக் கொண்டிருந்தார். இங்கு தலைவர்கள் நடந்து கொள்கிற விதத்தையும் தேசம் போகிற போக்கையும் கவனித்து வந்தவருக்கு, 'அடடா, என்னைப் போன்ற மனநோய் மருத்துவர்களுக்கு இந்தியாவில் ரொம்பக் கிராக்கி இருக்கும் போலிருக்கிறதே; அங்கே நடப்பதெல்லாம் பைத்தியக்காரத்தனமாகவல்லவா தோன்றுகிறது' என்று பட்டது. உடனே புறப்பட்டுவிட்டார், பாரத புண்ணிய பூமிக்கு. தமது அமெரிக்க மனைவி விவாகரத்து செய்துவிடுவதாகப் பயமுறுத்தியதைக் கூடப் பொருட்படுத்தாமல் தாய்நாட்டுச் சேவைக்கென ஓடோடியும் வந்தார்.

ஆனால் அவருடைய துரதிர்ஷ்டமோ அல்லது நாட்டின் தலைவிதியோ அரசியல் பெருந் தலைவர்கள் யாரும் சிகிச்சைக்கு அவரிடம் வரவில்லை. சினிமா நட்சத்திரம் ஆக வேண்டும் என்று ஏங்கி நலிந்த எக்ஸ்ட்ராக்கள்; நட்சத்திர மவுசு போய் இருட்டடிப்புக்கு ஆளாகித் தவித்த மாஜி நடிக நடிகையர்கள்; இருக்கிற பெயரையும் புகழையும் பத்திரமாகக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமே என்று சதா கவலைப்பட்டு உருகிக் கொண்டிருந்த பிரபல நட்சத்திரங்கள் என்று பெரும்பாலும் சினிமா வட்டாரத்தினரே அவருடன் தொடர்பு கொண்டனர். பம்பாயின் செல்வத்தில் புரளும் சமூகத்திலிருந்தும் சிலர் அவரைத் தேடி வந்தனர். ''என் மகன் என் எதிரேயே குடிக்கட்டும், வேண்டாம் என்று சொல்லவில்லை; ஆனால் ஒவ்வொரு தடவையும் மேஜைக் கடியில் உட்கார்ந்து கொண்டுதான் குடிப்பேன் என்கிறான்; அதைத்தான் என்னால் தாங்க முடியவில்லை, அவமானமாயிருக்கிறது'' என்று சொல்லிக் கொண்டு ஒரு தொழில் வர்த்தக சாம்ராஜ்ய அதிபர் வந்து சேர்ந்தார். இப்படி எத்தனையோ. சில சமயங்களில் டாக்டர் குஹா, தமக்கு எப்படி இன்னும் பைத்தியம் பிடிக்காமல் இருக்கிறது என்று அதிசயப்பட்டதுண்டு.

இவ்வாறு டாக்டர் குஹாவுக்குத் தம் தொழிலிலேயே கொஞ்சம் அலுப்பும் சலிப்பும் ஏற்படத் தொடங்கிய சமயத்தில்தான் அவர் ஸாரநாதன் வழக்கு பற்றிப் பத்திரிகைகளில் படித்தார். அவன் சார்பில் வழக்காடக் கோர்ட்டாரே ஒரு வக்கீலை நியமித்திருப்பதை அறிந்ததும் பானர்ஜியை நேரில் போய்ச் சந்திப்பது என்று தீர்மானித்துக் கொண்டார். (தொடரும்)

**பெயர் சூட்டிப் பரிசு பெற்றவர் விவரம் அடுத்த இதழில்...**

# புத்தாண்டில் பிறக்கும்

## குழந்தைகள் பத்திரிகை



# கோகுலம்

## மாதம் இருமுறை



யானைக்கொரு காலம் வந்தால்
பூனைக்கொரு காலம் வரும்

ரூ. 50 பரிசு பெறும் புகைப்படம்:
கம்பீரமான யானையும், தவ
மிருக்கும் பூனையும் கொண்ட
மாமல்லபுர சிற்பம்.

என். சுந்தர ராஜன்
3. ஜெயராம செட்டித் தெரு,
சைதாப்பேட்டை, சென்னை-15



பரிவுப் பரிசுகள் :

1. கவாஸ்கருக்கு ஒரு காலம் வந்தால்
கனோஷுக்கு ஒரு காலம் வராமலா போகும் !

   எஸ். பாலசுப்பிரமணியம்
   காமதேனு
   15, புஷ்பநகர் மெயின் ரோடு,
   சென்னை - 34

2. பெரிய நந்திக்கு முன்பாகச் சிறப்பற்ற முறையில்
காணப்படும் சிறிய நந்தி! -- தஞ்சைக் கோயில்

   எஸ். நம்பி
   ஸீஸைனர் லிமிடெட், எக்ஸ்பிரஸ் டவர்ஸ்
   நாரிமான் போர்ட், பம்பாய் - 1

3. ஜெம்பக்கனா !

   எச். இருதயராஜன்
   s/o ஏ. துரைராஜ்
   இண்டியன் டெலிபோன் இண்டஸ்ட்ரீஸ்
   துரவாணி நகர், பங்களூர்-16



# யானைக்கு ஒரு காலம்...







கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்

**ரூ. 50 பரிசு பெறும் புகைப்படம் :**

த. ஆ. பொன்னன்
221-222, ராசப்ப செட்டித் தெரு,
பூங்காநகர், சென்னை - 3

பரிவுப் பரிசுகள்:

1. ஏ. ரகுபதி
37, மேட்டுத் தெரு, மேற்கு சிந்தாமணி,
திருச்சி -- 2

2. "கோயிலில்லா ஊரில் நாங்கள் குடியிருக்கக் கூடாதென்றுதான் நீ இங்கு குடிவந்தாயோ ?"
டபிள்யூ. டி. எஸ். மூர்த்தி
வி. எஸ். டி. மோட்டார்ஸ் லிமிடெட்,
காட்பாடி எக்ஸ்டென்ஷன்,
வடஆர்க்காடு

3. ஸ்ரீராம்
பிளாக் 13, ஹவுஸ் 491,
லோடி காலனி,
புதுதில்லி — 3.

# கோயிலில்லா ஊரில்...



TYRES MAY COME
TYRES MAY GO

# BUT MANSFIELD GOES ON FOREVER*

*(OR SO IT SEEMS)



MRF

# GREETINGS FROM

# MANSFIELD

**THE TYRE WITH MUSCLE**




Manufactured by Madras Rubber Factory Ltd. in collaboration with MANSFIELD TIRE & RUBBER COMPANY, U.S.A.

OVER 50 YEARS' TYRE-BUILDING EXPERIENCE

LINTAS-MSFT.50-140




## முன்கதைச் சுருக்கம்

அகண்ட காவேரிக் கரையை அடுத்து ராஜம் பேட்டை என்ற ஒரு கிராமம் இருந்தது. அந்தக் கிராமத்தைச் சேர்ந்த பட்டாமணியம் கிட்டாவய்யர் நல்ல மனிதர்; பரோபகார சீலர்; சுற்றுப்புறங்களில் செல்வாக்கு உள்ளவர்.

கிட்டாவய்யருக்கு இரு சகோதரிகள். அவர்களில் அபயாம்பாள் பக்கத்திலிருந்த ஒரு கிராமத்தில் ஒரு வைதிகக் குடும்பத்தில் வாழ்க்கைப்பட்டிருந்தாள். ராஜம்மாளின் கணவர் துரைசாமி ஐயர் பம்பாயிலே உத்தியோகம் பார்த்து வந்தார்.

கிட்டாவய்யருக்குக் கங்காதரன், சூரியநாராயணன் (சூரியா) சுப்பிரமணியன் (கண்டு) என்னும் மூன்று புதல்வர்களும் லலிதா என்ற ஒரு புதல்வியும் இருந்தனர். லலிதாவுக்கு விவாக வயது ஆகியிருந்தது. அவளுக்குக் கல்யாணம் செய்யக் கிட்டாவய்யர் தீவிரமாக வரன் தேடிக் கொண்டிருந்த போது பம்பாய் ராஜம்மாளுக்கு உடம்பு அதிக அசௌக்கியம் என்று கடிதம் வந்தது.

சென்னை பத்மாபுரத்தில் மாஜி ஸப் ஜட்ஜ் பத்மலோசன சாஸ்திரி சமூகப் பிரமுகர். அவருடைய குமாரன் சௌந்தரராகவன் பி.ஏ. (ஆனர்ஸ்) டில்லி சர்க்கார் பொருளாதார இலாகாவில் நல்ல உத்தியோகத்தில் இருந்தான். கிட்டாவய்யர் தம் குமாரி லலிதாவுக்காக ராகவனை வரன் பார்த்தார். பையனை அவருக்குப் பிடித்திருந்தது. பிறகு கிட்டாவய்யர் பம்பாய்க்குத் தம் சகோதரி ராஜம்மாளைப் பார்க்கச் சென்றார்.

ராஜம்மாள் இல்வாழ்க்கையில் அவ்வளவு சந்தோஷத்தை அடைந்தவள் அல்ல. அவளுடைய புருஷன் துரைசாமி ஐயரின் ஒழுக்கத்தைப் பற்றியும் அவளுக்குப் பல ஐயங்கள் இருந்தன. அவளுடைய ஏக புதல்வி சீதாவிடம் உயிரை வைத்திருந்ததுடன் அவளை நல்ல இடத்தில் கல்யாணம் செய்து கொடுத்தால் நிம்மதியாகக் கண்ணை மூடலாம் என்று எண்ணியிருந்தாள்.

சௌந்தரராகவன் 1931ல் கராச்சி காங்கிரஸின் போது தாரிணி என்னும் மங்கையைச் சந்தித்தான். தேசசேவிகை தாரிணி அவனுடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டாள். கராச்சியிலிருந்து பம்பாய்க்குக் கப்பலில் பிரயாணம் செய்கையில் ராகவனுக்கும் தாரிணிக்கும் நட்பு முதிர்ந்தது.

ராகவனுடைய தாயார் காமாட்சி அம்மாள் அவனிடம் உயிரை வைத்திருந்தாள். அவளுடைய மூத்த நாட்டுப் பெண் மாமியாருடன் சண்டை போட்டுக் கொண்டு தன் புருஷனையும் அழைத்துக்கொண்டு தகப்பனார் வீட்டுக்குப் போய்விட்டாள். இதனால் மனமுடைந்திருந்த காமாட்சியம்மாள் ராகவனையே நம்பியிருந்தாள். அவன் சாதி தெரியாத வடநாட்டுத் தாரிணியை மணந்து கொள்வதென்பது அவளால் சகிக்க முடியவில்லை. தாரிணி பத்மாபுரத்துக்கு வந்திருந்தபோது அவளிடம் காமாட்சி அம்மாள் ஏதேதோ சொல்லி ராகவனிடம் சொல்லிக் கொள்ளாமலே போகும்படி செய்து விட்டாள். தாரிணி ரயில் பிரயாணத்தின்போது எழுதிய கடிதத்தில் பீகார் பூகம்பத்தினால் கஷ்டப்பட்டவர்களுக்குச் சேவை செய்யப் போவதாகச் சௌந்தரராகவனுக்குத் தெரிவித்திருந்தாள்.

காமாட்சி அம்மாளின் தூண்டுதலின் பேரில் ராகவன், கிட்டாவய்யர் பெண்ணைப் பார்க்க ராஜம் பேட்டைக்குப் போகச் சம்மதித்தான்.

## 15. ராஜத்தின் இரகசியம்

சீதா அப்பால் சென்றதும், ராஜம், "அண்ணா! பிற்பாடு எப்படி இருக்குமோ என்னவோ? அவகாசம் கிடைக்குமோ, கிடைக்காதோ? நான் சொல்ல வேண்டியதை உடனே சொல்லிவிட வேண்டும். அதற்கு முன்னால் ஒரு காரியம் இருக்கிறது! பெட்டி ஏதாவது கொண்டு வந்திருக்கிறாய் அல்லவா?

அதைக் கொஞ்சம் கொண்டு வா!'' என்றாள். அவளுடைய பரபரப்பின் காரணத்தைச் சிறிதும் அறியாத கிட்டாவய்யர், ''பெட்டி கொண்டு வந்திருக்கிறேன், ராஜம்! தாழ்வாரத்தில் இருக்கிறது. ஆனால் அதற்கு என்ன இப்போது அவசரம்? மெதுவாய்க் கொண்டு வந்தால் போச்சு. பெட்டி நல்ல கனம்; அதை யாரும் சுலபமாக எடுத்துக் கொண்டு போக முடியாது!'' என்றார்.

''அதற்காகச் சொல்லவில்லை, அண்ணா! வேறு காரணம் இருக்கிறது. பெட்டியை உள்ளே கொண்டு வா! அப்படியே வாசலில் எட்டிப் பார்த்து இவர் டாக்டரோடு காரில் ஏறிக் கொள்கிறாரா என்று கவனித்து வா! அநேகமாக மருந்து வாங்கிக் கொண்டு வருவதற்காகப் போவார்!'' என்றாள் ராஜம்.

''நீ எதற்காக இவ்வளவு அதிகமாய்ப் பேச வேண்டும்? நான் அடுத்த ரயிலுக்குப் போகிறதாக உத்தேசமில்லை! மெதுவாகப் பேசிக் கொள்ளலாமே!'' என்று கிட்டாவய்யர் சொல்லுவதற்குள்ளே ராஜம்மாள், ''அண்ணா! உனக்குப் புண்ணியமாய்ப் போகட்டும். கொஞ்சம் நான் சொல்லுகிறபடி செய்! ரொம்ப முக்கியமான விஷயம். நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டால் பிறகு என் மனம் நிம்மதியடையும். சொல்லி முடிக்கிற வரையில் பெரிய பாரமாயிருக்கும். சீக்கிரமே போய் எட்டிப் பார்த்துவிட்டுப் பெட்டியையும் எடுத்துக்கொண்டு வா!'' என்றாள். இதற்கு மேல் அவளோடு விவகாரம் செய்வதில் பயனில்லை என்று கிட்டாவய்யர் அறைக்கு வெளியில் சென்று தாழ்வாரத்தின் ஓரமாக எட்டிப் பார்த்தார். ராஜம் எதிர்பார்த்தபடியே துரைசாமி காரில் ஏறிக் கொண்டிருப்பதைக் கண்டார். தாழ்வாரத்தில் வைத்திருந்த பெட்டியை அறைக்குள் எடுத்துக் கொண்டு வந்து வைத்தார்.

''அண்ணா! கொஞ்சம் கதவைச் சாத்து! சீக்கிரம் பெட்டியை இங்கே என் பக்கத்தில் கொண்டு வா!'' என்றாள்.

கிட்டாவய்யர் அப்படியே செய்தார். செய்துவிட்டு ராஜம்மாள் செய்த காரியத்தை வியப்புடனே பார்த்துக் கொண்டிருந்தார்.

ராஜம் சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு தலைமாட்டில் வைத்திருந்த இரண்டு தலையணைகளில் ஒன்றை அவசரமாக எடுத்தாள். தலையணை உறையைக் கழற்றிவிட்டு ஒரு பக்கத்தில் போட்டிருந்த தையலை அவசர அவசரமாகப் பிரித்தாள். தலையணை பஞ்சுக்குள் கையை விட்டு எதையோ எடுத்தாள். முதலில் இரண்டு கத்தை ரூபாய் நோட்டுகள் வெளிவந்தன. பிறகு மிக அழகிய வேலைப்பாடு அமைந்த ரத்தின மாலை ஒன்று வெளி வந்தது. மாலையில் தொங்கிய பதக்கத்தில் வைரங்கள் ஜொலித்தன. வைரங்களுக்கு மத்தியில் பொன்னிறக் கோமேதகம் ஒன்று கண்ணைக் கவர்ந்தது.

''அண்ணா! இந்த இரண்டாயிரம் ரூபாய் நோட்டையும் இந்த ரத்தின மாலையையும் உன் பெட்டிக்குள்ளே பத்திரமாக வை! சீக்கிரம் வை!'' என்றாள்.





கிட்டாவய்யர் தயங்கினார். அவர் உள்ளத்தில் என்னவெல்லாமோ சந்தேகங்கள் உதித்தன. ''ராஜம்! இது என்ன?'' என்றார்.

''இது ஒன்றையும் நான் திருடிவிடவில்லை, அண்ணா! முதலில் உன் பெட்டிக்குள் பத்திரமாக எடுத்து வை! பிறகு எல்லாம் விவரமாகச் சொல்லுகிறேன். சொல்லித்தான் ஆக வேண்டும்!''

கிட்டாவய்யர் ஏதோ விசித்திரமான கனவு காண்கிறோம் என்று எண்ணிக் கொண்டு ரூபாய் நோட்டுக்களையும் ரத்தின மாலையையும் எடுத்துப் பெட்டிக்குள்ளே வைத்தார். பெட்டியைப் பூட்டிவிட்டுத் தலைநிமிர்ந்து சகோதரியைப் பார்த்தார்

ராஜம் மறுபடியும் ஒரு தடவை புன்னகை புரிய முயன்றாள். அந்த முயற்சியின் பலன் கிட்டாவய்யருக்கு விபரீதமாகப்பட்டது. ''ராஜம்! உடம்புக்கு ஏதாவது செய்கிறதா? மறுபடியும் டாக்டரைக் கூப்பிடச் சொல்லட்டுமா?'' என்று ஆத்திரமாய்க் கேட்டார்.

''வேண்டாம்! வேண்டாம்! டாக்டர் வந்து என்னத்தைச் செய்துவிடு

வார், பாவம்! அவர்தான் உன்னிடம் சொல்லி விட்டாரே? இனிமேல் மனோ தைரியந்தான் எனக்கு மருந்து! கத வைத் திறந்துவிட்டு வா; எல்லாம் சொல்லுகிறேன்!'' என்று ராஜம் கூறிப் பழையபடி தலையணையில் சாய்ந்து கொண்டாள். இத்தனை நேரம் உட் கார்ந்தபடி பேசிய காரணத்தினால் அவ ளுக்கு மூச்சு வாங்கிற்று.

கிட்டாவய்யர் படுக்கையின் அருகில் வந்து உட்கார்ந்து கவலையுடன் அவளைப் பார்த்தார்.

'' அண்ணா! நான் சொல்ல வேண் டியதை உன்னிடம் சொல்லாமல் சாக மாட்டேன். சொல்லாமல் செத்தால் என் நெஞ்சு வேகாது!....''

'' ராஜம்! இப்படியெல்லாம் பேசா மல் இருக்க மாட்டாயா? நீ சும்மா இருந்தாலே போதும்! நான் ஒன்றும் உன்னைக் கேட்கவில்லை!'' என்றார் கிட்டாவய்யர்.

ராஜம் சற்று நேரம் சும்மா இருந் தாள். மூச்சு வாங்கியது நின்றது. சிறிது களைப்பு நீங்கியது.

'' நீ ஒன்றும் கேட்க மாட்டாய்! ஆனால் நான் சொல்லித் தீர வேண்டும். இப்போது கொடுத்தேனே, இந்த இரண் டாயிரம் ரூபாய் பணமும் சீதாவின் கல் யாணத்துக்காகக் கொடுத்திருக்கிறேன். ரத்தின மாலையும் கல்யாணத்தின்போது அவளுக்குப் போடுவதற்காகத்தான், அண்ணா! நீயே சொன்னாய், — இருபது வருஷங்களாக உன்னை நான் ஒன்றும் தொந்தரவு செய்ய வில்லையென்று. அதற்கெல்லாம் சேர்த்து இப்போது தொந்தரவு கொடுக்கிறேன். சீதாவுக்கு நீதான் கல்யாணம் செய்து வைக்க வேண்டும். ஊருக்கு அழைத்துக் கொண்டு போய் அந்தப் பக்கத்திலேயே நல்ல வரனைப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொடுக்க வேண்டும். ஆகட் டும் என்று வாயைத் திறந்து சொல்லு. சொன்னால்தான் எனக்கு நிம்மதி ஏற்படும், டாக்டர் சொன்னதுபோல் ஒரு வேளை உடம்பு குணமானாலும் ஆகும்!'' என்றாள்.

'' ராஜம்! இப்படி நீ என்னைக் கேட்க வேண்டுமா? சீதாவை அப்படி நிராதரவாய் விட்டுவிடுவேனா? லலிதா வைப் போல் சீதாவும் என்னுடைய பெண் என்றே நினைத்துக் கொண்டிருக் கிறேன். கட்டாயம் நம்ம பக்கத்தி லேயே வரன் பார்த்துக் கல்யாணம் செய்து வைக்கிறேன். நீயும்கூட இருந்து பார்த்துச் சந்தோஷப்படப் போகிறாய். ஆனால், சீதாவின் கல் யாணத்துக்காக நீ உன் அகத்துக்கார ருக்குத் தெரியாமல் பணம் சேர்த்து வைத்துக் கொடுக்க வேண்டுமா? கிராமாந்தரத்து ஸ்திரீகள் இப்படி யெல்லாம் செய்வார்கள் என்று கேள் விப்பட்டிருக்கிறேன். வீட்டுச் சாமான் களை விற்றும் செட்டுப் பிடித்தும் நாட் டுப்புறத்து ஸ்திரீகள் பணம் சேர்த்து வைப்பதுண்டு. அந்த மாதிரி நடத் தையை உன்னிடம் நான் எதிர்பார்க்க வில்லை. அந்த மனுஷருக்குத் தெரிந் தால் என்ன நினைத்துக் கொள்வார்? உன்னைப் பற்றி என்ன என்று எண்ணு வார்? என்னைப் பற்றித்தான் என்ன நினைப்பார்? எனக்குப் பிடிக்கவே இல்லை!''

''கொஞ்சம் இரு, அண்ணா! நீ பாட் டுக்குப் பேசிக் கொண்டே போகாதே! அப்படியெல்லாம் நான் தப்புக் காரியம் பண்ண மாட்டேன். அவருடைய பணத்திலிருந்து காலணா நான் எடுத்தது கிடையாது. நம்ம வீட்டில் நீங்கள் எனக்குச் செய்து போட்ட நகைகளையும் ஆரம்பத்தில் இவர் எனக்குப் பண்ணிப் போட்ட நகைகளையும் விற்று அவருக்குக் கஷ்டம் வந்தபோது கொடுத்திருக் கிறேன். வீட்டுச் செலவுப் பணத்தி லிருந்து எப்படிப் பணம் மிச்சம் பிடிக்க முடியும்? இந்த பம்பாய்ப் பட்டணத் தில் குடித்தனம் பண்ணிப் பார்த்தால் உனக்கு அந்தக் கஷ்டம் தெரியும். இந் தப் பணமும் ரத்தின மாலையும் சீதா வின் கல்யாணத்துக்கு என்றே தெய்வத் தின் கிருபையால் கிடைத்தவை. கேட் டால் உனக்குக் கதை மாதிரி இருக்கும். நான் குழந்தையாயிருந்த காலத்தி லிருந்து எனக்குக் கதைப் புத்தகம் படிக்கப் பிடிக்கும் என்றுதான் உனக் குத் தெரியுமே! தமிழிலே வெளியான அவ்வளவு கதைப் புத்தகங்களும் நான் படித்திருக்கிறேன். ஹிந்தி பாஷையி லும் அநேக கதைப் புத்தகங்கள் படித் திருக்கிறேன். வருஷம் முந்நூற்றறுபத் தைந்து நாளும் இந்த மூன்று அறையி லேயே அடைந்து கிடக்கும் நான் வேறு என்னத்தைத்தான் செய்வது? எப்படிப் பொழுது போக்குவது? நான் படித் திருக்கும் ஆயிரம் கதைகளில் நடந்த அதிசயங்களைக் காட்டிலும் அதிசயமான சம்பவம் என்னுடைய வாழ்க்கையில் உண்மையாகவே நடந்தது. அதை உனக்குச் சொல்லப் போகிறேன். வேறு யாருக்கும் இது தெரியாது. சீதாவுக்குக் கூடத் தெரியாது.....''

இந்தச் சமயத்தில் கையில் காப்பி யுடன் வந்தாள் சீதா. அம்மாவும் மாமாவும் பேசிக் கொண்டிருக்கும் போது அறைக்குள் வரலாமோ,

கூடாதோ என்று அவள் தயங்கியதாகக் காணப்பட்டது.

''வா! அம்மா!'' என்று தாயார் ஈனக் குரலில் கூறியதும் தைரியமடைந்து உள்ளே வந்தாள்.

கிட்டாவய்யர் அவளிடமிருந்து காப்பியை வாங்கிக் கொண்டு, ''நீ கொஞ்சம் சாப்பிடுகிறாயா?'' என்று ராஜத்தைப் பார்த்துக் கேட்டார்.

''கொஞ்சம் கொடு! இத்தனை நாட்களும் நான் உயிரை வைத்துக் கொண்டிருப்பது டாக்டர் கொடுத்த மருந்தினால் அல்ல; இந்தக் காப்பியினாலேதான்!'' என்றாள் ராஜம்.

பின்னர் சீதாவைப் பார்த்து, ''குழந்தாய்! வாசலில் அப்பா வந்துவிட்டாரா என்று பார்! ஒருவேளை சாப்பிடக்கூட மருந்து இல்லை. அப்பா மருந்து வாங்கிக் கொண்டு வந்த உடனே ஓடி வந்து சொல்லு!'' என்றாள். அந்தக் குறிப்பைச் சீதா அறிந்து கொண்டு அறையிலிருந்து வெளியேறி மச்சுப் படிகளின் வழியாகக் கீழே சென்றாள்.

ராஜம் கிட்டாவய்யரைப் பார்த்து, ''அண்ணா! இப்போது நான் சொல்லப் போகிற விஷயத்தை இவரிடம், அதாவது சீதாவின் அப்பாவிடம், நீ ஒரு நாளும் சொல்லக் கூடாது. வேறு யாரிடமும் சொல்லக் கூடாது. வீட்டிலே மன்னியிடம்கூடச் சொல்லப்படாது. சொல்லுவதில்லை என்று சத்தியம் பண்ணிக் கொடு; வேண்டாம். சத்தியம் வேண்டாம். நீ சொன்ன சொல்லை நிறைவேற்றுவாய் என்று எனக்குத் தெரியும். யாரிடமும் சொல்லாதிருப்பாயல்லவா?'' என்று சொல்லி நிறுத்தினாள்.

''சொல்லவில்லை; சொல்லவில்லை. நீயே என்னிடம் ஒன்றும் சொல்லாமலிருந்தால் நல்லது. பேசினால் உனக்கு இரைக்கிறது! இப்படி உனக்குத் தொந்தரவு கொடுப்பதற்குத்தானா நான் பம்பாய்க்கு வந்தேன்?''

''எனக்கு ஒரு தொந்தரவும் இல்லை; கேள்!'' என்றாள் ராஜம். ''எனக்கு இந்தத் தடவை உடம்புக்கு வந்து இருபது நாளாயிற்று. நன்றாக ஞாபகம் இருக்கிறது. நான் படுத்துக் கொண்ட அன்றைக்கு வெள்ளிக்கிழமை. சாயங்காலம் அம்பிகையின் படத்துக்கு முன்னால் விளக்கேற்றி வைத்துவிட்டு நமஸ்காரம் பண்ணினேன். சியாமளா தண்டகம் ஸ்தோத்திரம் சொன்னேன். 'அம்மா! தாயே பராசக்தி! நீதான் என் குழந்தை சீதாவைக் காப்பாற்ற வேண்டும். நல்ல இடத்தில் குழந்தைக்குக் கல்யாணம் ஆகக் கிருபை செய்ய வேண்டும்' என்று வேண்டிக் கொண்டேன். உடம்பு ஏதோ மாதிரி இருந்தது. படபடவென்று வந்தது. தலை சுழலுவதுபோல் தோன்றியது. உடனே இந்த அறைக்கு வந்து இதே கட்டிலில் சாய்ந்து படுத்துக் கொண்டேன். சீதா அவளுடைய சிநேகிதியைப் பார்த்துவிட்டு வருவதற்காகப் போயிருந்தாள். இவர் இன்னும் ஆபீஸிலிருந்து வரவில்லை. உனக்குப் போன தடவையே சொல்லியிருக்கிறேனே! சில நாளைக்கு இவர் சாயங்காலம் வீட்டுக்கு வருவார்; சில நாளைக்கு வரவே மாட்டார். இன்றைக்கு வருகிறாரோ இல்லையோ என்று நினைத்துக் கொண்டிருக்கும்போது கண்ணைச் சுற்றிக் கொண்டு தூக்கம் வந்தது. அது தூக்கமா அல்லது மயக்கமா என்று எனக்குத் தெரியாது. கண்கள் மூடிக் கொண்டன. அப்புறம் கொஞ்ச நேரம் ஒன்றுமே தெரியவில்லை.

'' இப்படி ஒரு மணி நேரம் போயிருக்க வேண்டும் என்று பிற்பாடு

*The following particulars regarding the ownership of the 'KALKI', the Tamil weekly newspaper, are published, as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules, 1956.*

FORM IV

1. *Place of Publication*: Madras
2. *Periodicity of its Publication*: Weekly
3. *Name of Printer and Publisher*:
   R. Ananthanarayanan
   *Nationality*: Indian
   *Address*: 20, Dr. Guruswami Mudaliar Road, Chetput, Madras-31
4. *Name of Editor*: T. Sadasivam
   *Nationality*: Indian
   *Address*: 20, Dr. Guruswami Mudaliar Road, Chetput, Madras-31
5. *Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital;*

Sri T. Sadasivam, 20, Dr. Guruswami Mudaliar Road, Chetput, Madras-31. Srimathi M. S. Subbulakshmi, 20, Dr. Guruswami Mudaliar Road, Chetput, Madras-31. Sri R. Ananthanarayanan 20, Dr. Guruswami Mudaliar Road, Chetput, Madras-31. Sri V. Vaidyanathan, 1-A/2, Tank Road, Nungambakkam Madras-34. Sri K. Rajendran, 1, Purushothama Mudaliar Road, Lake Area, Madras-34. Sri K. R. Athmanathan, 20, Dr. Guruswami Mudaliar Road, Chetput, Madras-31, Sri R. Kannan, 26/208, Sion-Matunga Road, Bombay-22. Sri V. Murali, 29/C, MIG Flats, Anna Nagar, Madras-40

1-3-72 R. Ananthanarayanan,
**Publisher**

கடிகாரத்தைப் பார்த்துத் தெரிந்து கொண்டேன். மயக்கம் தெளிந்து கண்ணை விழித்துப் பார்த்தபோது வெறுமனே சாத்தியிருந்த என் அறைக் கதவு திறந்தது. அந்தச் சத்தம் கேட்டுத்தான் என் மயக்கம் கலைந்திருக்க வேண்டும்.

''கதவைத் திறப்பது சீதாவா அல்லது சீதாவின் அப்பாவா என்று எண்ணினேன். அதற்குள் கதவு நன்றாய்த் திறந்தது. சீதாவும் இல்லை, அவள் அப்பாவும் இல்லையென்று தெரிந்தது. ஒரு ஸ்திரீ உள்ளே வந்தாள். கிட்டத்தட்ட என் வயதுதான் இருக்கும். வடக்கத்தியாள் போலத்தான் இருந்தாள். தலையில் முக்காடு போட்டிருந்தாள். கையில் ஒரு சின்னத் தோல் பெட்டி வைத்திருந்தாள். என் சமீபமாக வந்து, 'ராஜம்மாள் என்கிறது நீதானா?' என்று கேட்டாள். ஹிந்தி பாஷையில்தான். இருபது வருஷங்களாக இந்த ஊரில் இருந்ததினால் எனக்கு ஹிந்தி நன்றாகத் தெரியும். ஆயினும் வந்திருப்பவள் யாரோ என்னமோ என்ற தயக்கத்தினால் சட்டென்று பதில் சொல்ல முடியவில்லை.

''உடனே அவள் கொஞ்சம் பதற்றமான குரலில், 'இதோ பார், அம்மா! ஒரு முக்கியமான காரியமாக நான் வந்திருக்கிறேன். வீண் பொழுது போக்க நேரம் இல்லை. ராஜம்பேட்டை ராஜம்மாள் என்கிறது நீதானா? துரைசாமி ஐயரின் சம்சாரம்?' என்றாள். 'ஆமாம்' என்று ஈனஸ்வரத்தில் சொன்னேன். 'அதை எப்படி நான் நம்புகிறது' என்று சொல்லிவிட்டு அந்த ஸ்திரீ நாலுபுறமும் பார்த்தாள். சுவரிலே மாட்டியிருக்கிற படங்கள் அவள் கண்களில் பட்டன. சமீபத்தில் சென்று பார்த்தாள். அண்ணா! உனக்கு இங்கிருந்தே தெரிகிறதல்லவா? அந்தப் படங்களில் ஒன்று எனக்குக் கல்யாணமான புதிதில் நானும் அவரும் ஒன்றாக எடுத்துக் கொண்ட படம். இன்னொன்று மூன்று வருஷங்களுக்கு முன்னால் நானும் அவரும் சீதாவும் எடுத்துக் கொண்டது. இரண்டாவது படத்தை உற்றுப் பார்த்துவிட்டு, 'இதில் இருக்கிற பெண் யார்? உன் மகளா?' என்று அந்த ஸ்திரீ கேட்டாள். 'ஆமாம்' என்று சொன்னேன். இன்னும் சற்றுப் படத்தை உற்றுப் பார்த்துவிட்டுச் சடார் என்று திரும்பி என் அருகில் வந்தாள். என் முகத்தை உற்றுப் பார்த்து, 'ஆமாம், நீ ராஜம்மாள்தான்!' என்றாள். அப்போது அவளை நான் உற்றுப் பார்த்தேன். அவளுடைய முகத்தில் ஜொலித்த களையையும் அவளுடைய கண்களின் காந்த சக்தியையும் என்னால் சொல்லி முடியாது. 'இவ்வளவு அழகான ஸ்திரீயும் உலகத்தில் உண்டா?' என்று எண்ணி நான் திகைத்துப் போனேன். அந்த ஸ்திரீ தன்னுடைய கைப்பெட்டியை அதோ இருக்கிற அந்த மேஜை மேலே வைத்துவிட்டுச் சடசடவென்று நடந்து போய்க் கதவைச் சாத்தித் தாளிட்டுக் கொண்டு வந்தபோது என் மனத்தில் பீதி உண்டாயிற்று. எழுந்து ஓடிப் போகலாமா என்று தோன்றியது. அதற்கும் துணிச்சல் ஏற்படவில்லை. கைகாலை அசைக்கவே முடியவில்லை. மந்திரத்தினால் கட்டுண்ட சர்ப்பம் என்பார்களே, அம்மாதிரி இருந்தேன். அந்த ஸ்திரீ கதவைத் தாளிட்டு விட்டு வந்து என் பக்கமாக முதுகைக் காட்டிக் கொண்டு நின்று மேஜை மேலிருந்த தோல் பெட்டியைத் திறந்தாள். எதை எதையோ எடுத்து மேஜை மேல் பரப்பினாள். எடுத்து வைத்ததில் சிலவற்றை மறுபடியும் பெட்டிக்குள் எடுத்து வைத்தாள். மற்றவைகளைக் கையில் எடுத்துக் கொண்டு எனக்கு அருகில் வந்தாள்.

'' 'ராஜம்மா! உனக்கு நான் இப்போது சொல்லப் போவது ஆச்சரியத்தை உண்டாக்கலாம். ஆனால், ஆச்சரியம் ஒன்றும் இல்லை. விஷயம் என்னவென்று பிற்பாடு சொல்லுகிறேன். முதலில் இந்த ரூபாயையும் ரத்தின மாலையையும் வாங்கிக் கொள். ரூபாய் இரண்டாயிரம் இருக்கிறது. ரத்தின ஹாரம் ரொம்ப மதிப்புள்ளது. பணம், ஹாரம் இரண்டும் உன்னுடைய மகளின் ஸ்ரீதனத்துக்காகக் கொடுக்கிறேன். ஒன்றும் யோசிக்காதே! வாங்கிக் கொள்!' என்றாள். ஒரே சமயத்தில் என்னை அதிசயம், ஆனந்தம், பயம் எல்லாம் பிடுங்கித் தின்றன. குழந்தை சீதாவுக்கு இந்த அதிர்ஷ்டம் வருகிறதே என்று சந்தோஷமாயிருந்தது. இவள் யார்? இவள் எதற்காகக் கொடுக்கிறாள் என்று ஆச்சரியமாயிருந்தது. ஆயினும் அவளுடைய பேச்சைத் தட்ட எனக்கு மனோதிடம் இல்லை. கையிலே வைத்துக் கொண்டே, 'இந்தா! பிடி!' என்று இரண்டு தடவை சொன்ன பிறகு இரண்டு கைகளையும் நீட்டி வாங்கிக் கொண்டேன். 'பத்திரமாய் வை!' என்றாள். 'ஆகட்டும்; அப்புறம் பெட்டியில் வைக்கிறேன்' என்று சொல்லிவிட்டுத் தலையணையின் கீழே ரூபாய் நோட்டுக்களையும் ரத்தின ஹாரத்தையும் தள்ளினேன்.

''பிறகு அவள், 'ராஜம்மா! இம்மாதிரி நான் பணமும் ஹாரமும் கொண்டு வந்து கொடுத்தது உனக்கு







# வெண்மையிலும் வெண்மை. நியூட்ரல் கருநிறம். தத்ரூபமான வண்ண நயம். பெரிய எக்ஸ்போஷர் விரிவெல்லை. படல மூட்டம் படியாமை.

பிரிண்டுகளுக்கும், என்லார்ஜ்மெண்டுகளுக்கும் எப்போதுமே குறிப்பிட்டுக் கேளுங்கள் ஆக்பா-கேவார்ட் தாள்களே. மறவாதீர்கள் மட்ட ரகப் புகைப்படத் தாள்களை உபயோகித்தால் எத்தகைய சிறப்பான புகைப்படமும் அடியோடு மங்கிவிடும். ஆக்பா-கேவார்ட் புகைப்படத் தாள்களோ கண்ணிறைவான புகைப் படங்களைத் தட்டாமல் தரும். பளிச்சென்று தெள்ளத் தெளிவாக எடுபடும் படங்கள்.

**ரூபெக்ஸ்**—எவ்வித நெகட்டிவ்களிலிருந்தும் கனகச்சிதமான பிரிண்டுகளைப் பெறுவதற்கான தொடர்புத் தாள்.

**ப்ரோவிரா**—சிறிய சைஸ் பிரிண்டுகளில் ஒளிந்துள்ள புகைப்பட அழகுகளை எல்லாம் வெளிப்படுத்தும் என்லார்ஜிங் தாள் இது.

அனுமதிபெற்ற எல்லா ஆக்பா-கேவார்ட் விற்பனையாளர்களிடமும் கிடைக்கும். ஆக்பா-கேவார்ட் அவர்களின் கூட்டுறவோடு இவற்றைத் தயாரிப்பவர்கள்: தி நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்., பம்பாய்.







ஏகபோக விநியோகஸ்தர்கள்:
**ஆக்பா-கேவார்ட் இந்தியா லிமிடெட்**
பம்பாய் • நியூ டெல்லி • கல்கத்தா • சென்னை.
®புகைப்பட சாதனங்களின் தயாரிப்பாளர்களான ஆக்பா-கேவார்ட், ஆண்ட்வெர்ப்/லீவர்குஸன் ஆ



SIMOES/AG/5 Tam

ஆச்சரியமாயிருக்கலாம். இவள் யார் முன்பின் தெரியாதவள் இம்மாதிரி கொடுப்பதற்கு என்று நீ நினைக்கலாம். உனக்கு என்னைத் தெரியாதுதான். ஆனால் உன்னை ரொம்ப நாட்களாக எனக்குத் தெரியும். வெகுகாலத்துக்கு முன்னால் உனக்கு நான் ஒரு கெடுதல் பண்ணினேன். வேண்டுமென்று செய்ய வில்லை. ஏதோ தெய்வாதீனமாக அப்படி நேர்ந்துவிட்டது. அதற்குப் பரிகாரமாகத்தான் இந்தப் பணத்தையும் ஹாரத்தையும் கொடுத்திருக்கிறேன். இவற்றை நீ பத்திரமாய்க் காப்பாற்றி வைத்திருந்து கல்யாணத்தின்போது உன் மகளுக்குக் கொடுக்க வேண்டும்! ஆனால், இப்படி நான் கொடுத்தேன் என்கிற விஷயத்தை யாரிடமும் சொல்லக் கூடாது. தெரிகிறதா?' என்றாள். 'வேறு யாரிடம் சொன்னாலும் உன் புருஷனிடம் சொல்லவே கூடாது. தெரிகிறதா?' என்றாள். நான் பதில் என்ன சொல்வது என்று தெரியாமல் பிரமித்துப் போயிருந்தேன். 'என்ன பேசாமலிருக்கிறாய், ராஜம்மா! நான் சொன்னதெல்லாம் தெரிந்ததா?' என்று சிறிது கடுமையான குரலில் கேட்டாள். 'தெரிந்தது' என்று முணுமுணுத்தேன். 'நான் சொன்னபடி செய்வாயா?' என்றாள். நான் சும்மா இருந்தேன். உடனே அந்த ஸ்திரீயின் முகத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. பத்ரகாளியாக மாறினாள். கண்கள் நெருப்புத் தணலைப் போல் ஆயின. கைப் பெட்டிக்குள்ளே கையை விட்டு எதையோ எடுத்தாள். எடுத்த வஸ்து பளபளவென்று ஜொலித்தது. அது என்னவென்று நினைக்கிறாய், அண்ணா!'' என்று ராஜம் கேட்டு நிறுத்தினாள்.

ராஜம் சொல்லி வந்த கதையைப் பற்றி இன்னது நினைப்பதென்று தெரியாமல் கிட்டாவய்யர் ஸ்தம்பித்துப் போயிருந்தார். ராஜம் சரியான ஞாபகத்துடன் பேசுகிறாளா என்று அடிக்கடி அவருக்குச் சந்தேகம் உண்டாயிற்று. ஆனால் இரண்டாயிரம் ரூபாய் நோட்டும், ரத்தின ஹாரமும் சற்று முன் தாம் வாங்கிப் பெட்டியில் வைத்தது என்னவோ உண்மை. ஆகையால் கதையும் ஒருவேளை நிஜமாக இருக்கலாம் அல்லவா?

''எனக்கு எப்படி அம்மா தெரியும்? தெரிய வேண்டிய அவசியமும் இல்லை. நீ பேச்சை நிறுத்தினால் போதும், ராஜம்! டாக்டர் சொல்லி விட்டுப் போனது நினைவில்லையா?''

''ஆகா! டாக்டர் இருக்கட்டும் டாக்டர்! இன்னும் கொஞ்சம்தான் பாக்கியிருக்கிறது; அதையும் கேட்டுவிடு! அந்த ஸ்திரீ தோல் பெட்டியிலிருந்து எடுத்தது வேறு ஒன்றுமில்லை. கூர்மையாக வளைந்திருந்த ஒரு சின்னக் கத்தி. அதை எடுத்து அவள் என்னுடைய கண் முன்னால் காட்டினாள். 'பார்த்தாயா, ராஜம்மா! நன்றாகப் பார்த்துக்கொள். நான் நல்லவர்களுக்கு நல்லவள்; பொல்லாதவர்களுக்குப் பொல்லாதவள். நான் சொன்னபடி நீ எல்லாம் செய்ய வேண்டும். உன் அகத்துக்காரரிடம் ஒரு வார்த்தைகூட நான் வந்தது பற்றிச் சொல்லக் கூடாது. சொன்னதாகத் தெரிந்ததோ, ஒரு நாளைக்கு இந்தக் கத்தியால் உன்னை ஒரே குத்தாகக் குத்திக் குடலைக் கிழித்து விடுவேன்! ஜாக்கிரதை' என்றாள். எனக்குச் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. மின்சார

## மரமேறிய ஜனாதிபதி!

தியோடோர் ரூஸ்வெல்ட் அமெரிக்க ஜனாதிபதியாக இருந்தபோது கிராமப்புறங்களில் நேர்க் கோட்டில் 'வாக்கிங்' போவார். அந்த நேர்க் கோட்டில் கவர் இருந்தால் எம்பிக் குதிக்க வேண்டும். மரமோ வைக்கோல் போரோ இருந்தால் ஏறி இறங்க வேண்டும். வீட்டு வாசல் எதிர்ப்பட்டால், முன்புறம் நுழைந்து பின்பக்கமாக வெளியேற வேண்டும்! சாலையோடு நடை பழகுவதைவிட இப்படி நேர்க் கோட்டில் வாக்கிங் போவது அதிக சுவாரசியமானது என்பதுடன் தேகாப்பியாசமும் இதில் மிகுதி என்பது அவர் வாதம்! இந்தத் தகவலை ஆர்தர் ஹெலி தமது நாவல் ஒன்றில் தருகிறார்.

## இருவருமே அவசியம்!



தன்னம்பிக்கை உள்ளவன், இல்லாதவன் இருவருமே சமூகத்துக்கு உதவுகிறார்கள். தன்னம்பிக்கை உள்ளவன் ஆகாய விமானத்தைக் கண்டு பிடித்தான்; இல்லாதவன் பாராசூட்டைக் கண்டு பிடித்தான்!

ஓர் ஆங்கிலப் பத்திரிகையிலிருந்து — ''அனந்தா''

விளக்கின் ஒளியில் பளபளவென்று பிரகாசித்த அந்தக் கத்தியைப் பயங்கரத்துடன் பார்த்த வண்ணம் இருந்தேன். 'பயப்படாதே, ராஜம்! பயப்படாதே! நான் சொன்னபடி செய்தால் உனக்கு ஒன்றும் வராது!' என்று அந்த ஸ்திரீ சொல்லிக் கொண்டிருக்கையில் யாரோ மாடிப் படி ஏறி வரும் சத்தம் கேட்டது. அவள் கொஞ்சம் திடுக்கிட்டுப் போனாள். 'யார் உன் புருஷனா?' என்று மெல்லிய குரலில் கேட்டாள். 'இல்லை, மகள்!' என்று சொன்னேன். அவளுடைய கலவரம் நீங்கிற்று. சீதா அறைக் கதவின் அருகில் வந்து கதவைத் தட்டினாள். 'அம்மா! காரியமாயிருக்கிறாயா? கதவைத் திற!' என்றாள். நான் படுத்திருந்தபடியே, 'சீதா! படத்துக்குப் பக்கத்தில் விளக்கு எரிகிறதா பார்! இன்று வெள்ளிக்கிழமை யல்லவா? முகத்தை அலம்பிப் பொட்டு வைத்துக் கொண்டு லலிதா சஹஸ்ர நாமம் சொல்லு!' என்றேன். 'சரி, அம்மா' என்று சீதா சமையலறைக்குள் போனாள்.

''அந்த ஸ்திரீ அவசரம் அவசரமாகத் தோல் பெட்டியைப் பூட்டி எடுத்துக் கொண்டு புறப்பட்டாள். 'ராஜம்மா! ஜாக்கிரதை! நான் சொன்னதெல்லாம் நினைவிருக்கட்டும்!' என்று சொல்லி விட்டுப் புறப்பட்டாள். கதவைத் திறந்து கொண்டு வெளித் தாழ்வாரம் சென்று அங்கிருந்து அவள் மச்சுப்படி இறங்கும் சத்தமும் கேட்டது. அப்புறம்தான் எனக்கு உயிர் வந்தது. கொஞ்சம் தைரியமும் வந்தது. இவ்வளவும் ஒருவேளை கனவில் காண்கிறோமோ என்று தோன்றியது. தலையணையின் அடியில் கையை விட்டுப் பார்த்தேன். நோட்டுக் கத்தையும் ரத்தின ஹாரமும் இருந்தன. கனவு காணவில்லை. உண்மையாக நடந்தவை தான் என்ற நம்பிக்கை பெற்றேன். இதற்குள் சீதா அறைக்குள் வந்தாள். 'அம்மா! யாராவது வந்திருந்தாளா, என்ன? சத்தம் ஏதோ கேட்டதே—! ஏன் அம்மா இந்த நேரத்தில் படுத்திருக்கிறாய்?' என்று கேட்டுக் கொண்டே வந்தவள், இந்த மேஜையைப் பார்த்ததும் பிரமித்து நின்றாள். பிரமிப்புக்குக் காரணம் மேஜையின் மேல் பளபளவென்று ஜொலித்த கத்திதான்! போகிற அவசரத்தில் அந்த ஸ்திரீ அதை எடுத்துப் போக மறந்து விட்டாள். நானும் கவனியாமல் இருந்து விட்டேன். 'அம்மா! இது ஏதம்மா கத்தி? இதன் பிடி வெகு விசித்திரமாக இருக்கிறதே?' என்று கத்தியை எடுக்கப் போனாள் சீதா. எனக்கு ஒரே திகிலாய்ப் போய் விட்டது. 'வேண்டாம் சீதா! வேண்டாம்! அந்தக் கத்தியைத் தொடாதே!' என்றேன். என்னுடைய குரலின் பட்படப்பைக் கவனித்த சீதா கத்தியைத் தொடாமல் என் முகத்தை உற்றுப் பார்த்தாள். இதற்குள் மறுபடியும் மாடிப் படி ஏறும் சத்தம் தடதடவென்று கேட்டது. கத்தியை மறைத்து வைக்கலாமா, அறைக் கதவைத் தாளிடச் சொல்லலாமா என்று யோசிப்பதற்குள் அந்த ஸ்திரீ புயற் காற்றுப் புகுவதைப் போல் அறைக்குள் புகுந்தாள். நேரே மேஜை அருகில் வந்து கத்தியை லபக்கென்று எடுத்துத் தோல் பெட்டியில் வைத்துக் கொண்டாள். பிறகு சீதாவின் முகத்தையும் என் முகத்தையும், இரண்டு மூன்று தடவை மாறி மாறிப் பார்த்தாள். 'ராஜம்மா! இந்தப் பெண் உன் குமாரியா?' என்று கேட்டாள். 'ஆமாம்' என்று சொன்னேன். உடனே சீதாவை அவள் கட்டிக் கொண்டு உச்சி முகந்து, கன்னத்திலும் ஒரு முத்தம் கொடுத்தாள். 'கடவுள் உன்னை நன்றாக வைக்கட்டும். ஆண் பிள்ளைகளின் கொடுமைகளிலிருந்து உன்னைக் காப்பாற்றட்டும்!' என்றாள். பிறகு என்னைப் பார்த்து 'ராஜம்! நான் சொன்னதெல்லாம் ஞாபகம் இருக்கட்டும்! ஜாக்கிரதை!' என்று சொல்லி விட்டு மறுபடியும் அறையை விட்டுச் சென்றாள். அவள் காலடிச் சத்தம் மறைந்ததும் சீதா என் அருகில் வந்து, 'இது யாரம்மா, இந்தப் பைத்தியம்!' என்று கேட்டாள். 'அப்படிச் சொல்லாதே! சீதா, இவள் பைத்தியமில்லை. ரொம்ப நல்ல மனுஷி. இவளுக்கும் எனக்கும் வெகு நாளைய சிநேகிதம்' என்றேன். 'சிநேகிதம் என்றால் நான் பார்த்ததே கிடையாதே?' என்றாள் சீதா. 'நீ பிறப்பதற்கு முன்னால் இவளும் நானும் ரொம்பச் சிநேகமாக இருந்தோம். அப்புறம் பரேலுக்கு இவள் குடிபோய் விட்டாள். அதிகமாக இந்தப் பக்கம் வர முடிவதில்லை' என்றேன். பொய்தான் சொன்னேன். என்னவோ அப்படிச் சொல்ல வேண்டும் என்று தோன்றியது...''

இதை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த கிட்டாவய்யர், தம் மனத்துக்குள், ''இது மட்டும்தானா பொய்! இத்தனை நேரம் இவள் சொல்லிக் கொண்டிருந்ததெல்லாம் பொய்தான்! பாவம்! சீதாவுக்காகக் கணவனுக்குத் தெரியாமல் பணம் சேர்த்து வைத்து விட்டு இந்தக் கதையைக் கற்பனை செய்திருக்கிறாள்!'' என்று எண்ணிக் கொண்டார்.

(தொடரும்)

# டிவிஎஸ் ரீடிரெட் எப்பொழுதும் பத்திரமானது

டிவிஎஸ் ரீடிரெடிங் செய்யும் டயர்கள் புதிய டயர்களைப் போலவே தோன்றுகின்றன. ஆனால், ரீடிரெடிங் செய்யும்போது, ஒவ்வொரு அம்சத்தையும் ஊன்றிக் கவனித்துக் கண்ணும் கருத்துமாகச் செய்யும் வேலை, டயர்களுக்குப் புதிய தோற்றத்தைக் கொடுப்பதற்காக மட்டும் அன்றி, அவை சாலைகளில் நன்கு பதிந்து செல்லவும், நீண்ட காலம் உழைக்கவும் துணை புரிகின்றது.

ஒவ்வொரு டயரையும் ஒரு முறைக்கு இரு முறையாகப் பரிசோதிக்கின்றனர். டயரில் ஆணி, கண்ணாடித் துண்டு முதலியவை அணுவளவு இருந்தாலும், டயர் பழுதாகிவிடும். ஆகையால் நவீன இயந்திரங்களில் அனுபவமுள்ள நிபுணர்கள் செம்மையாகப் பணியாற்றுகின்றனர். உறுதியாக இருக்கவேண்டும் என்பதற்காக டிவிஎஸ் ஸ்தாபனம் காமெல்பாக் ரப்பரைத் தானே சொந்தமாகத் தயாரிக்கின்றது.

டிவிஎஸ் ரீடிரெட் டயர்கள் வேறு எந்த ரீடிரெட் டயர்களைக் காட்டிலும் அதிக நாள் உழைக்கின்றன.

இந்தியாவிலேயே மிகப் பெரிய அளவில் ரீடிரெட் செய்வது டிவிஎஸ்.






உங்கள் நம்பிக்கைக்கு உரியது டிவிஎஸ்

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்,**

பங்களூர் - கோயமுத்தூர் - கலமசேரி - மதராஸ் - புதுக்கோட்டை - சேலம் - செகந்திராபாத் - திருநெல்வேலி - விஜயவாடா

SI-6073 1

# மூன்று மந்திரவாதிகள்

கதை: வாண்டுமாமா

சித்திரம்: ராஜு

23

தப்பி விட்டான் பயல். அவன் வெற்றிக்குப் பாடுபட்டிருப்பவள் என் மகள் புவனாதான் என்பது இப்போது தான் புரிகிறது. என் திறமைகளையெல்லாம் என் புதல்விகளுக்குக் கற்றுக் கொடுத்தது எத்தனை ஆபத்தாகி விட்டது?

அவன் தப்பிச் சென்றிருப்பது சாதாரணக் குதிரையில். காஞ்சனா, நீ உடனே நம் மந்திரக் குதிரை மீதேறி அவர்களைத் தொடர்ந்து போய்ப் பிடித்து வா... போ...!

புவனாவின் மூத்த சகோதரி காஞ்சனா மந்திரக் குதிரை மீதேறிக் காற்றென வருகிறாள்.

இளவரசே, மந்திரக் குதிரையில் யாரோ நம்மைத் தொடர்ந்து வருகிறார்கள்.

நாம் என்ன செய்வது?

அந்தக் குதிரையின் வேகத்தை மிஞ்சி நம்மால் தப்ப முடியாது. ஆகவே தந்திரத்தினால் தான் தப்ப வேண்டும்.

அடுத்த விநாடி....

இளவரசே! நம் குதிரை தான் இந்தப் பாழடைந்த கோயில். நான் தான் காளி சிலை. நீங்கள் தான் பூசாரி. வருபவர்களிடம் திறமையாகப் பேசிச் சமாளியுங்கள்.

ஐயா, பூசாரியாரே! சற்று முன்பு இந்தப் பக்கமாக ஒரு வாலிபனும் வனிதையும் குதிரை மீது போனார்களா?

மகா மாயே, மகா காளி! இந்தக் காளியாத்தாக் கோயில் பக்கம் யாரும்மா வரப் போறாங்க? நான் யாரையும் பாக்கல்லே.


விந்தையாக இருக்கிறதே? எப்படித் தப்பி இருக்க முடியும்? புவனா கெட்டிக்காரி தான். எங்களுக்கெல்லாம் தெரியாத மந்திர தந்திரங்களை அவள் அறிந்திருக்கிறாள்.


முட்டாள் நீ. ஏமாந்து விட்டாய். அந்தக் கோயில், காளி சிலை, பூசாரி எல்லாமே, நீ யாரைத் தேடிப் போனாயோ அவர்கள் தான்.


அக்கோயிலில் ஒரு சிறு செங்கல்லையோ அப்பூசாரியின் உடையில் ஒரு நூலையோ நீ கொண்டு வந்திருந்தால் கூடப் போதுமே. நான் அவர்களை இங்கு வந்து விழும்படி செய்வேனே...! போ போ. என் முன் நிற்காதே...


கவலைப் படாதீர்கள் அப்பா. நான் போய் அந்தப் புவனாவின் கொட்டத்தை அடக்கி இருவரையும் இழுத்து வருகிறேன். விடை கொடுங்கள்.
சென்று வா மகளே, வென்று வா! கொண்டு வா உன் தங்கையைக் கைதியாக.


பூசாரியாக இருந்து உங்களிடம் கேள்வி கேட்டது யாரென்று தெரியுமா?
தெரியாமலென்ன? உன் மூத்த சகோதரி காஞ்சனா தானே?
ஆமாம் அடுத்து வரப் போகிறவள் இன்னொரு அக்கா. தயாராக இருங்கள். உங்களுக்குத் தோட்ட வேலை தெரியுமா? தெரிந்திருக்க வேணும்!


புவனா! பெற்ற தங்கையையே எதிர்த்து, மற்றவரிடமே உன் கை வரிசையைக் காட்டுகிறாயோ? இரு இரு! உன் கொட்டத்தை அடக்காவிட்டால் நான் கல்பனா இல்லை.

ரோஜாவின் நறுமணம் வீசுகிறதே என்று பார்த்தேன். இங்கே ஒரு பூந்தோட்ட மிருக்கிறது... ஆகா, எத்தனை பெரிய பெரிய ரோஜாக்கள்?

பெரியவரே! இந்தப் பக்கமாகக் குதிரை மீது ஓர் ஆணும் பெண்ணும் சென்றதை...

...பா...பா... பா...பப்பா... பா...

ஓ... நீ ஊமையா...? ஐயோ பாவம்... யாரையும் பார்க்க வில்லை என்று சொல்லுகிறாய்?

பா... ப... பப்பா...

ஆச்சரியம்! என் பார்வையில் தென்பட்டவர்கள் எப்படி இங்கு மாயமாக மறைந்து போனார்கள்? ...ம்... அப்பாவின் முன்னால் எந்த முகத்தோடு போவது? சேச்சச்சே...!

ஏன்? அவமானத்தினால் தலை தொங்கிவிட்டதா? உங்களோடு மந்திர தந்திரங்களைக் கற்றவன் உங்களை மிஞ்சிவிட்டான் இல்லையா? முட்டாளே! இன்னுமா நீ ஏமாந்தது எப்படி என்பது புரியவில்லை?

அவர்களுடைய குதிரை தான் கந்தவனம். ரோஜாச் செடிகளெல்லாம் புவனா. ஊமைத் தோட்டக் காரன் தான் அவள் காதலன்... புரிந்ததா?

அந்த மண்ணில் ஒரு பிடி, அந்த ரோஜாவில் ஒரு மலர் கொண்டு வந்திருந்தால் போதுமே. அவர்களை இங்கு கதறிக் கொண்டு வந்து விழ வைத்திருப்பேனே. ம்... போ... போ! இம்முறை நானே போகிறேன். அவ்விருவரையும் தப்ப விட மாட்டேன்.

தொடரும்



பங்களா தேசப் பிரதமரும் - பாரதப் பிரதமரும்.

# 'ஜெய் பங்களா!'

## 5. நேரடிப் போராட்டமும் பாகிஸ்தானின் அடக்குமுறையும்

"மகாத்மா காந்தி, ஜவாஹர்லால் நேருவுக்குப் பிறகு உலகத்தில் இவ்வளவு மாதங்கள் தொடர்ந்து அடிபட்ட பெயர் ஷேக் முஜிபுர் ரஹ்மானுடையதுதான்" என்று என் பத்திரிகை சகாவும் லண்டன் டைம்ஸ் நிருபருமான ஸ்ரீ பீட்டர் ஹாஸல்ஹர்ஸ்ட் சொன்னார். நாங்கள் இருவரும் வங்க பந்து முஜிபுர் ரஹ்மானின் இல்லத்துக்கு வெளியே புல்வாந்தரையில் உட்கார்ந்திருந்தோம்.

"விரித்த ஜமுக்காளம் விடியமட்டும் கச்சேரி" என்பார்களே அதுபோல் எப்போ விடியப் போகிறது என்று மக்கள் அவர் வீட்டு வாசல் முன் குழுமத் தொடங்கி விடுகிறார்கள். புது ஜனநாயகமானதால் தில்லியில் நம் பிரதமர் வீட்டுக்கு முன் உள்ள போலீஸ் ஜபர்தஸ்து இல்லை. "ஜெய் பங்களா", "வங்க பந்து வாழ்க" கோஷங்கள் அவ்வப்போது எழுப்பப்பட்டு வந்தன. சுமார் எட்டரை மணிக்கு ஷேக் சாகிப் மாடியிலிருந்து கீழே இறங்கி வந்தார்.

சிரித்த முகம். வெள்ளை வெளேரென்று வெளுத்த ஜிப்பாவும், பைஜாமாவும் அணிந்திருந்தார் முஜிப் ரஹ்மான். கறுப்புநிற ஜவாஹர் அரைக் கோட்டுக்கு மேல் அழகான அங்கவஸ்திரம் அணிந்திருந்தார். வெளியே வந்த பிறகுதான் பையில் உள்ள புகைக்கும் குழாயை எடுத்துத் தட்டிக் கொட்டிச் சரிப்படுத்திக் கொண்டே எங்களுடன் அளவளாவினார். சில நிருபர்கள் தங்களுக்குப் பிரத்தியேகப் பேட்டி கொடுக்கப்படவில்லை என்று புகார் செய்தார்கள். "பொறுங்கள், உங்களுக்கே அலுக்கும்வரை உங்களைத் தொணதொணக்கப் போகிறேன்!" என்றார். மாஸ்கோ ரேடியோ நிருபர், ஸ்ரீ மொராஜாவுக்குக் காலை இருபதுநிமிடப் பேட்டி ஏற்பாடாகியிருந்தது.

"இந்த நித்திய தரிசனக்காரர்கள் உங்கள் காலத்தை விரயம் செய்கிறார்கள்" என்று கொஞ்சம் தயங்கிக் கொண்டே அவருடைய பத்திரிகைக் காரியதரிசி சொன்னார். அவரை ஒரு தடவை விரைத்துப் பார்த்து விட்டு, "இந்த நித்திய தரிசனக்காரர்கள் இல்லாமலிருந்திருந்தால் இந்த நாடு விடுதலை அடைந்திருக்காது என்பதை மறந்து விடாதீர்!" என்று எச்சரித்தார் முஜிப் ரஹ்மான். அத்துடன் நிற்கவில்லை. "நான் பதவியில் உள்ள வரையில் அவர்களுக்குத் தினசரி பேட்டி உண்டு" என்றார்.

கேட்டுக்குப் பக்கத்தில் ஒரு துப்பாக்கி தாங்கிய காவலாளர் நின்றுகொண்டிருந்தார். அவரை மெதுவாக நகர்த்திவிட்டு முஜிப் ரஹ்மான் கூடியிருந்தவர்களுக்குச் சில நிமிடங்கள் அவகாசம் கொடுத்தார். அன்றாடக் கஷ்டங்கள் பற்றிய புகார்தான். "நீங்கள் சரித்திரம் அறியாத வகையில் செயல்பட்டு வெற்றி கண்ட சிவில் வீரர்கள். நீங்கள் இந்தச் சுதந்திர நாட்டை உருவாக்கினீர்கள். ஆக்கப் பொறுத்தவர்கள் ஆறும்வரை பொறுங்கள்" என்று புத்திமதி கூறினார். கூட்டத்தில் உள்ள

கே. ஸ்ரீநிவாசன்

வர்களுக்கு ஆனந்தம். ''ஜே'' கோஷங்களை எழுப்பிக் கொண்டு கலைந்தனர்.

''இதுவரை நீங்கள் புரட்சித் தலைவர். இனி இந்நாட்டைப் பரிபாலிக்கும் தலைவர். உங்கள் பாதுகாப்புக்குக் கொஞ்சம் நீங்கள் ஒத்துழைக்க வேண்டும்'' என்றேன். முஜிப் ரஹ்மான் இலேசாகச் சிரித்துவிட்டுச் சொன்னார்: ''நண்பரே! என் பாதுகாப்பு என் மக்கள் கையில் உள்ளது. அவர்களுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமாக நான் இருக்கும்வரை பயம் வேண்டாம். அனாவசியப் பாதுகாப்புச் சுவர் எனக்கும் மக்களுக்குமிடையே ஒரு சூன்யத்தை உண்டாக்கும்.''

இதற்குள் மாஸ்கோ ரேடியோ - டெலிவிஷன் நிருபர்கள் தங்களுக்குக் கொடுத்த நேரம் வந்துவிட்டது என்பதைச் சங்கேதமாக அறிவித்தார்கள். ஷேக் சாகிப் வீட்டுக்குள் சென்றார். செல்லும்போது என் கையைப் பற்றிச் சென்றதால் எனக்கு அதிர்ஷ்டம் அடித்தது. மற்றப் பத்திரிகை நிருபர்களுக்கு ஒரு வாரத்துக்கு அப்பால் அவகாசம் கொடுக்கப்பட்டிருந்தது. இரண்டு தினங்களுக்கு முன்பு வந்த எனக்கு அன்று பதினைந்து நிமிடங்கள் பேட்டி கிடைத்தது.

''சென்ற வருடம் மார்ச் மாதம் டாக்காவில் உங்களுடன் ஜெனரல் யாஹ்யா கான் பேச்சு வார்த்தை நடத்தினாரே, அப்போது அவர் கபட நாடகம் நடத்துகிறார் என்று உங்களுக்குத் தோன்றவில்லையா?''

''தோன்றவில்லை. நான் அரசியலில் நேர் பாதையைக் கடைப்பிடிப்பவன். நான் தேர்தல் முடிவுகள் பிரகாரம் வேறு வழி என்ன இருக்கிறது என்றுதான் நினைத்தேன்.''

''உங்களைக் கைது செய்யலாம் என்பதை யாராவது உங்களுக்குத் தெரிவித்தார்களா?''

''தாராளமாக. மூன்று தினங்கள் பேச்சு வார்த்தைகள் நடந்தபோதே அவர்கள்—(யாஹ்யா கானும், பூட்டோவும்) ஏதோ சூழ்ச்சி செய்கிறார்கள் என்பது எனக்குப் புலப்பட்டது. தவிர என்னைக் கைது செய்த இரவுக்கு முன் என் நண்பர்கள் என்னைத் தலைமறைவாகும்படி எச்சரித்தார்கள்.''

''பின் ஏன் நீங்கள் உஷாராகவில்லை?''

''நான் தலைமறைவாகியிருந்தால் என் குடும்பத்தாருக்கு இம்சை உண்டாகியிருக்கும். தவிர, பகிரங்கமாகக் கைது செய்யப்பட்ட பிறகு வங்க தேச மக்களுக்கு வீராவேசம்



குடியரசுதின விழாவில் 'நாட்' விமான ஊர்வலம்.

உண்டாகும் என்று எதிர்பார்த்தேன். நான் உயர்த்திய கொடியை என் சகாக்கள் விடவில்லை.''

''பாகிஸ்தான் அரசு தங்கு தடை இல்லாமல் மக்களைக் கொன்று குவிப்பார்கள் என்று நீங்கள் எதிர்பார்த்திருக்க முடியாதே?''

தம் குழாயைப் புகைத்துக் கொண்டே பேசி வந்த முஜிப் ரஹ்மானின் நா தழுதழுத்தது. ''கொலை பாதகர்கள்! ஹிட்லர், ஜார் அரசர் போன்றோரையும் மிஞ்சி விட்டார்கள். அடக்குமுறை நடக்கும் என்று எதிர்பார்த்தேன். ஆனால் இந்த மாதிரி அட்டூழியம் நடக்கும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை.''

''நீங்கள் சிறையில் இருந்த காலத்தில் உங்கள் நாட்டில் நடந்ததைப் பற்றி ஏதாவது தெரியுமா?''

''தெரியாது. எனக்குப் பத்திரிகைகளோ ரேடியோவோ கிடையாது. கடிதங்கள் அனுமதிக்கப்படவில்லை. ஆனால் எனக்குத் தெரியும், என் மக்கள் அடக்குமுறைக்குப் பயந்து பெட்டிப் பாம்பாகி விடமாட்டார்கள் என்று.''

ஒரு தேங்காயில் நான்கு கிளாஸ் இளநீர் உண்டு. - டாக்காவில் ஒரு வீதி



சிட்டகாங் துறைமுகத்தை 'விக்ராந்த்' கப்பலைச் சேர்ந்த போர் விமானங்கள் தாக்கின.



ஷேக் முஜீபுர் ரஹ்மான் ஜெனரல் யாஹ்யாகானுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தி வந்தபொழுது அவர் தம் மக்களிடம் அடிக்கடி வற்புறுத்திய அம்சம் இதுதான்: ''என்னைக் கைது செய்துவிட்டால் இந்நாட்டு மக்கள் ஒவ்வொருவரும் ஒரு முஜீபுர் ரஹ்மான் ஆகிவிட வேண்டும்.'' வங்க தேசத்து இளைஞர்கள் அவர் சொன்னதைச் செய்து காட்டினார்கள்.

வங்க பந்து (வங்க தேசத்தின் மித்திரன்) என்று வெகு பிரியமாக அழைக்கப்படும் ஜனாப் ரஹ்மான் 1920 மார்ச் மாதம் 17ம் தேதி ஃப்ரீத்பூர் மாவட்டத்தில் தாங்கிபாரா கிராமத்தில் பிறந்தார். இன்று அவருடைய தந்தையின் இல்லம் இடித்துத் தள்ளப்பட்டுள்ளது. அப்பொழுது வங்க மாநிலம் துண்டாடப்படவில்லையாதலால் ஜனாப் ரஹ்மானுக்குக் கவி தாகூரின் காவியங்களிலும் நேத்தாஜி சுபாஷ் சந்திரபோஸின் அரசியல் முறையிலும் நாட்டம் உண்டாயிற்று. கல்கத்தாவில் இஸ்லாமியா கல்லூரியில் உயர் கல்விக்காகச் சென்றார். எனினும் அவர் தம் 27ம் வயதில்தான் பட்டம் பெற்றார். காரணம் அவருடைய பதினேழாவது வயதிலேயே அரசியலில் ஈடுபாடு உண்டாகிச் சிறைவாசமும் கிட்டியது.

கல்கத்தா இருட்டறைச் சம்பவம் என்று சரித்திரப் புத்தகத்தில் ஒரு பொய் சொல்லப்பட்டு வந்தது. இதை நானும் படித்திருக்கிறேன். இந்தப் பொய்யை உண்மையாக்க வெள்ளையர்கள் ஹால்வெல் சின்னத்தைக் கல்கத்தாவில் நிறுவினார்கள். இந்தச் சின்னத்தைத் தகர்க்க நேத்தாஜி ஓர் இயக்கம் நடத்தினார். அதிலே சேர்ந்து கொண்டார் புரட்சியில் ஆர்வம் கொண்ட முஜீப்.



1946ல் அவர் முஸ்லிம் லீக் அரசியலில் ஈடுபட்டு 1947ல் பிரிவினை ஏற்பட்டபொழுது கிழக்கு வங்காளம் பாகிஸ்தானில் சேர வேண்டும் என்று கிளர்ச்சி செய்தார். இந்த அம்சத்தை மட்டும் மனத்தில் வைத்துக்கொண்டு சில அரசியல் விமரிசகர்கள் ஷேக் அன்றும் முஸ்லிம் லீகர் இன்றும் அதே என்கிறார்கள். இது அபாண்டம்.

எந்த இரு குடிமக்கள் சித்தாந்தம் கானல் நீர் என்று அவருக்குப் புலப்பட்டதோ, அதை ஷேக் சாகிப் பழம் சட்டையைக் கழற்றி எறிவது போல் எறிந்து விட்டார். அவர் தம் நாட்டுக்குகந்தது என்ற நோக்கில் எடுக்கும் தீர்மானங்கள் நமக்கு வருங்காலத்தில் பிடிக்காமல் போகலாம். அதற்காக அவரை வகுப்புவாதி என்று சொல்வது அபத்தம்.

பாகிஸ்தான் உருவான மறு வருடமே ஷேக் சாகிபுக்கு பாகிஸ்தான் சிறை பரிச்சயம் ஏற்பட்டது. இது மொழிக் கிளர்ச்சியால் ஏற்பட்டது என்று முன்னர் குறிப்பிட்டுள்ளேன். அன்று சிறை செல்லத் தொடங்கியவர் இதுவரை பத்து வருடங்கள் அந்நாட்டுச் சிறைகளில் வாசம் புரிந்துள்ளார். அப்படியிருந்தும் அவருக்குப் பாகிஸ்தான் மேல் வெறுப்பு 1970ம் ஆண்டு வரை ஏற்படவில்லை என்பது ஜனாப் ரஹ்மானின் தாராள மனப்பான்மையை எடுத்துக் காட்டுகிறது. ''எந்த நாட்டிலும் பாமர மக்கள் நல்லவர்கள். பாகிஸ்தானில் பாமர மக்களின் பெயரால் பஞ்சாபிகள் தாமே கொழித்து வந்துள்ளார்கள்'' என்று பேட்டியின்போது குறிப்பிட்டார்.

இளைஞராக இருந்தது முதல் ஜனாப் ரஹ்மான் பாகிஸ்தான் அரசியலில் ஈடுபட்டதால் பால் எது தண்ணீர் எது என்று அறியும் ஆற்றல் அவருக்கு உண்டாயிற்று. அவசரப்பட்டு பாகிஸ்தானைப் பலவீனப்படுத்தியவர் என்ற குற்றச்சாட்டை அவர்மேல் சுமத்த முடியாது.

முஸ்லிம் லீக் அரசியலுடன் தொடர்பு என்பது ஜனாப் ரஹ்மானுக்கு மூன்று வருட காலத்துக்குக் கூட இல்லை. மொழிக் கிளர்ச்சியில் சிறைப்பட்டவர் வங்க தேசத்தைப் பாகிஸ்தானியர் சுரண்டுகிறார்கள் என்ற உண்மையை 1950ல் வெளிப்படுத்த முற்பட்டார். இன்று ஆறு அம்சத் திட்டம் என்று பிரபலமடைந்துள்ள சித்தாந்தம் இருபத்திரண்டு வருடங்களுக்கு முன் புலப்பட்ட உண்மை என்பது குறிப்பிடத் தக்கது.

கிழக்கு வங்க மக்களுக்கு அதிகாரத்தில் சரியான பங்கு கிடைக்க வேண்டும்; ஜனத்தொகை அடிப்படையில் தேசிய சபை அமைய வேண்டும் என்ற கோரிக்கைக்குக் கிடைத்த பதில் மீண்டும் சிறைவாசம். அவர் சிறையில் இருந்தபொழுதே அவரை அவாமி லீகின் கூட்டுக் காரியதரிசியாகத் தேர்ந்தெடுத்தார்கள். ஜனாப் சுஹ்ரவர்த்தியுடன் இணைந்து செயல்பட்டு அவாமி லீகை ஒரு பெரிய அரசியல் சக்தியாக்கினார்.

1954ல் நடந்த மாநிலத் தேர்தல்களில் போட்டியிட்டு வெற்றி பெற்ற ஜனாப் ரஹ்மான் வங்கத்துச் சிங்கம் என்று பெயர் பெற்ற ஜனாப் ஃபஸ்லுல் ஹக்கின் மந்திரி சபையில் சிறிது காலத்துக்கு இடம் பெற்றார். பின்னர் ஜனாப் அடாவுர் ரஹ்மான் மந்திரி சபையிலும் அவர் சிறிது காலம் பதவி வகித்தார். இந்த அநுபவம் அவருக்குப் பாகிஸ்தான் அரசியல் முறை உளுத்துப்போன கூடு என்பதைத் தெளிவாக்கியது. பின்னர் 1956ல் வெகு சாவதானமாக வெளியிடப்பட்ட அரசியல் சாஸனம், பாகிஸ்தான் தலைவர்கள் எப்படிப்பட்ட மோசக்காரர்கள் என்பதற்குச் சான்றாக அமைந்தது. 'உள்ளதும் போச்சே நொள்ளைக் கண்ணா' என்பது போல் இந்த அரசியல் சாஸனத்துக்கும் கிரகணம் பிடித்து ஜெனரல் அயூப்கான் என்ற ராகு பாகிஸ்தானின் சாஸனத்தை விழுங்கி விட்டது.

பாகிஸ்தானில் ராணுவ ஆட்சி ஏற்பட்ட பிறகு ஜனாப் ரஹ்மான் பல தடவைகள் சிறை சென்று வெளி வந்துள்ளார். 1958ல் அவர் பேரில் ஆறு வழக்குகள் தொடரப்பட்டன. ஆனால் எல்லாம் தோற்றன. 1962ல் மீண்டும் அவர் கைது செய்யப்பட்டார். ஆனால் 1965ம் ஆண்டில் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் ஏற்பட்ட யுத்தம் அவருடைய அரசியல் கிளர்ச்சிக்கு உரைகல்லாக அமைந்

தது. சுமார் மூன்று வாரங்களுக்கு இரு பாகிஸ்தான்களுக்குமிடையே எவ்வித போக்குவரத்தும் இல்லாமல் போயிற்று. கிழக்கு வங்கத்தின் பொருளாதாரம் சீர்குலைந்தது. ''காஷ்மீரத்தில் பொதுஜன வாக்கெடுப்புக்காகக் கூப்பாடு போடும் ஜெனரல் அயூப்கான் இங்கு வாக்கெடுக்கட்டும். 85 சத மக்கள் என்னை ஆதரிப்பார்கள்'' என்றார். அவர் சொன்னதில் கொஞ்சம்தான் தவறு. ஐந்து வருடங்களுக்குப் பிறகு 100 சத ஆதரவு அவருக்குக் கிட்டியது.

**1970**ல் முஜிப் ரஹ்மானின் கொடி மாநிலம் முழுதும் பறந்தது. அவருக்கு அமோக வெற்றி கிடைத்ததும் ஜுல்பிகர் பூட்டோவுக்குக் குளிர் ஜுரம் கண்டு விட்டது. தம்முடைய மக்கள் கட்சியின் தயவுடன்தான் முஜிப் ரஹ்மான் அதிகாரத்தைக் கைப்பற்ற முடியும் என்று நம்பியவர் இடிந்து உட்கார்ந்து விட்டார். பாகிஸ்தானுக்கு முன் இரு சாத்தியக் கூறுகளே இருந்தன. ஒன்று தேர்தல் முடிவுகளை மரியாதையாக ஒப்புக் கொண்டு முஜிப் ரஹ்மானை அரசமைக்கச் சொல்லுவது; இரண்டாவது கற்பாறையின் மேலே மோதுவது போல் மோதிப் பூர்ண மாநில சுயாட்சிக் கோரிக்கையை எதிர்ப்பது. ஜெனரல் யாஹ்யாகான் திருதிருவென்று விழித்தார். இறுதியில் பாகிஸ்தான் தேசிய சபையை டாக்காவில் கூட்ட இசைந்தார்.

தம் கை ஓங்கிய கை என்பதை உணர்ந்திருந்த முஜிப் ரஹ்மான் இந்தியாவுக்கும் கிழக்கு பாகிஸ்தானுக்குமிடையே, அமெரிக்காவுக்கும் கானடாவுக்குமிடையே உள்ளது போன்ற சுமுக உறவு நிலவும் என்றார். காஷ்மீரப் பிரச்னையையும் சுமுகமாகத் தீர்க்க வேண்டும் என்று தம்முடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்தார். இது பாகிஸ்தானை ஆண்டவர்களுக்கு ஆத்திரத்தை மூட்டியது.

இடையே முஜிப் ரஹ்மான் அவாமி லீக் கட்சியின் கமிட்டி ஒன்றை அமைத்து அது அரசியல் சாஸனத்தை உருவாக்கும் என்றார். ஆறு அம்சத் திட்டத்தின் அடிப்படையில் உண்டாகும் எந்த சாஸனத்துக்கும் தம் எதிர்ப்பைத் தெரிவித்தார் ஜுல்பிகர் பூட்டோ. ஆகவே மார்ச் மாதம் 13ந் தேதி தேசிய சபை கூடும் என்று ஜெனரல் யாஹ்யா அறிவித்த பொழுது நாட்டில் கெடுபிடி நிலைமை நிலவிற்று. நடப்பது நடந்தே தீரும் என்று தெரிந்ததும் ஜுல்பிகர் பூட்டோ தேசிய சபைக் கூட்டத்தைப் பகிஷ்கரிக்கப் போவதாக அச்சுறுத்தினார். முஜிப் ரஹ்மான் இந்தக் கெடுபிடிகளுக்குப் பயப்படவில்லை.

குழப்பம் என்பது மார்ச் மாதம் முதல் தேதி உண்டாயிற்று. தேசிய சபைக் கூட்டத்தைக் காலவரையறையின்றி ஒத்திப் போட்டார் யாஹ்யா. இதற்கு அர்த்தம் தேர்தல் முடிவுகளுக்கு மதிப்புக் கொடுக்கப்பட மாட்டாது என்பதே. முஜிப் ரஹ்மான் இந்தத் திருப்பத்தை எதிர்பார்த்திருந்தார்.



உடனடியாக அவர் கிழக்கு வங்கத்தில் கிளர்ச்சியைத் தொடங்கினார். பள்ளிகளும் கல்லூரிகளும் மூடப்பட்டன. நாடெங்கும் கதவடைப்புத் தொடங்கியது.

வங்க தேசமே திரண்டு எழுந்ததும் பாகிஸ்தான் அரசு கலகலத்தது. டாக்காவில் ஊரடங்குச் சட்டம் அமர்க்களப்பட்டது. கிழக்கு வங்க கவர்னர், பதவியிலிருந்து நீக்கப்பட்டார். பத்திரிகைகளுக்கு வாய்ப் பூட்டுப் போடப்பட்டது.

செய்வதையும் செய்து விட்டு ஜெனரல் யாஹ்யாகான் எதிர்த் தரப்புத் தலைவர்கள் கூட்டம் ஒன்றைக் கூட்டப் போவதாக அறிவித்தார். முஜிப் ரஹ்மானின் பதில் சாத்வீக சட்டமறுப்பு. நான்கு தினங்களுக்கு ஹர்த்தால் என்றதும் நாட்டில் ஸ்தம்பித நிலை ஏற்பட்டது. ஏதாவது செய்ய வேண்டும் என்று பாகிஸ்தான் அரசு துருப்புகளை ஏவிவிட்டது. டாக்கா நகரத்தில் கிளர்ச்சிக்காரர்களுடன் மோதியதில் ராணுவம் சுமார் முந்நூறு நிராயுதபாணிகளைச் சுட்டுக் கொன்றது. தெருத் தெருவாகச் சண்டை ஏற்பட்டதன் விளைவாக ஆயிரக் கணக்கில் மக்கள் காயம் அடைந்தனர். வீடு வாசல்கள் நாசமாயின.

இந்தக் கட்டத்தில் முஜிப் ரஹ்மான் வங்க தேசத்தில் உள்ள அரசினரின் காரியாலயங்கள் தம் உத்தரவுக்குக் கீழ்ப்படியுமாறு உத்தரவிட்டார். வெகு ஆனந்தத்துடன் சர்க்கார் ஊழியர்கள் அவர் உத்தரவுக்குக் கீழ்ப்படிந்தார்கள். வரி கொடா இயக்கம் ஜரூராயிற்று. பாங்குகள் மட்டும் தினம் இரண்டு மணி நேரம் பணியாற்றுவதை முஜிப் ரஹ்மான் அநுமதித்தார்.

ராணுவ ஆட்சியை வாபஸ் பெறவேண்டும், துருப்புகளை ராணுவ விடுதிகளுக்கு வாபஸ் செய்ய வேண்டும், ராணுவத்தார் நிகழ்த்திய கொலைகள் பற்றி விசாரணை நடத்த வேண்டும் என்று அறைகூவினார் முஜிப் ரஹ்மான். பாகிஸ்தான் பிடி தளர்ந்து வந்ததற்கு முதல் சூசகம் அந்நியர்கள் தங்கள் குடும்பத்தினரை வெளியேற்றத் தொடங்கியது ஆகும். டாக்கா ரேடியோ, சுதந்திர வங்க தேச ரேடியோ என்று சொல்லிக் கொண்டு முஜிப் ரஹ்மானின் கட்டளைக்குக் கீழ்ப்பணிந்து ஒலி பரப்பிற்று.

வங்க தேசத்துக்குப் புது கவர்னராக நியமிக்கப்பட்ட லெப்டினண்ட் ஜெனரல் டிக்கா கானுக்கு விசுவாசப் பிரமாணம் செய்து வைக்க நீதிபதிகள் மறுத்தனர். கிழக்கு வங்காள ராணுவப் படையினர் தங்கள் விசுவாசத்தை முஜிப் ரஹ்மானுக்குக் காட்ட முடிவு செய்தனர்.

இந்தத் தருவாயில்கூட ஜெனரல் யாஹ்யா நிலைமையைச் சமாளித்திருக்கலாம். ஆனால் தவறினார். 1971 மார்ச்சு மாதம் டாக்காவில் வந்து சேர்ந்த யாஹ்யா இரண்டு வாரங்கள் பேச்சு வார்த்தைகள் நடத்துவதாகப்

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

## பிரைவேட் லிமிடெட்

(ஸ்தாபிதம்: 1947)

"வீணு விகார்" — 17-A, ஃபிளாங் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்
சயான் (கிழக்கு) பம்பாய்-22. D. D.
டெலிபோன்: 471455
தபால் பெட்டி 6769 : : தந்தி: "GROWRICH"

ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்ட் அடையும் வசதியுள்ள கீழ்க்கண்ட

**மார்ச்சு 1972 புதிய குருப்புகள்**

**குறுகிய காலம் : 25 மாதங்கள்**

சேருவதற்கு கடைசி தேதி : 11-3-72
முதல் ஏலத் தேதி : 12-3-72

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சீட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| B | 100-00 | 2,500-00 |
| C | 50-00 | 1,250-00 |
| F | 25-00 | 625-00 |
| G | 20-00 | 500-00 |

**நீண்ட காலம் : 40 மாதங்கள்**

சேருவதற்கு கடைசி தேதி : 25-3-72
முதல் ஏலத் தேதி : 26-3-72

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சீட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| E | 500-00 | 20,000-00 |
| F | 250-00 | 10,000-00 |
| G | 125-00 | 5,000-00 |

**வேலை நேரம் :** *காலை 8 மணி முதல் 10-30 வரை; மாலை 4 மணி முதல் 7-30 வரை*

*வார விடுமுறை :* திங்கட்கிழமை

**தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்**

**"பாலுஸேரி பில்டிங்ஸ்"**

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி : 414 :: சென்னை – 5
கிளைகள் : பெங்களூர் – கல்கத்தா – புது டெல்லி

இலவச பிரசுரத்திற்கு எழுதுங்கள்

சீட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

பசப்பினார். போதாத குறைக்கு ஜுல்பிகார் அலி புட்டோவும் வந்து சேர்ந்தார். மாநில சுயாட்சி கொடுக்கப்படப் போகிறது என்று கூடச் செய்தி பறந்தது. ஆனால் இதெல்லாம் அடுத்து வரப் போகும் படுகொலைகளுக்குத் திரை. திடுதிப்பென்று மார்ச் மாதம் 23ந்தேதி யாஹ்யா இஸ்லாமாபாதுக்குப் பிரயாணமானார். 25ந் தேதி அவர் செய்த ரேடியோப் பிரசங்கத்தில் ஜுஜுப் ரஹ்மான் தேசத் துரோகி என்றும் அவர் பாகிஸ்தானின் ஒற்றுமையைக் குலைக்கச் சதி செய்து வருகிறார் என்றும் குற்றம் சாட்டினார். இரு வாரங்கள் டாக்காவில் தங்கி ராணுவ முஸ்திபுகளைச் செய்து முடித்த பின்னர் சமரச உடன்பாடு ஏது? அடுத்து நிகழ்ந்தது ஜுஜுப் ரஹ்மானைச் சிறைப் பிடித்தல்.

விதி விளையாடிவிட்டது. இருபத்துமூன்று ஆண்டுகள் அவதிப்பட்ட மக்கள் பாகிஸ்தான் ராணுவத்தின் அட்டூழியங்களுக்கு ஆளாக வேண்டும் என்று ஆண்டவன் எழுதிவிட்டான் போலும்! எல்லாவிதத்திலும் பூரண பயிற்சி பெற்ற பாகிஸ்தான் ராணுவத்துக்கும் தேச பக்தியுடன் சிறுமை கண்டு கொதித்தெழுந்த மக்கள் சமூகத்துக்குமிடையே போர் மூண்டது. இதன் பலனை இந்தியா அனுபவிக்க வேண்டி வந்தது. (தொடரும்)

---




☐ எந்த வகை இந்தியத் தபால் தலைகள் இந்தியாவிலே பயன்படுத்தப்படாமல் இந்தியாவுக்கு வெளியே உபயோகப்படுத்தப்பட்டன?

1885—1860 ஆண்டுகளில் ஸ்டெரெய்ட்ஸ் செட்டில்மெண்டுகளில் சில தபால் தலைகளுக்குப் பற்றாக்குறை ஏற்பட்டபோது இந்தியத் தபால் தலைகள் பயன்படுத்தப்பட்டன.

☐ முதன் முதலில் நினைவுத் தபால் தலை வெளியிடப்பட்டது எந்தத் தேசத்தில்?

அமெரிக்கா முதன் முதலில் நினைவுத் தபால் தலை வெளியிட்டது. 1893 ஜனவரி 2ந் தேதி சிகாகோவில் கொலம்பியா கண்காட்சியையொட்டி நினைவுத் தபால் தலை வந்தது.

☐ இந்தியத் தபால் தலை ஒன்றில் வெளியான தவறு திருத்தப்படவில்லை. அது எப்போது? திருத்தி வெளியான தபால் தலையும் உண்டு. அது என்ன?

1963ம் ஆண்டு அக்டோபர் 1ந் தேதி அன்னிபெஸண்ட் பதினைந்து பைசா நினைவுத் தபால் தலையில் 1837 என்று தப்பாக வருஷம் அச்சடிக்கப்பட்டிருந்தது. சரியான வருஷம் 1847.

புதைபொருள் இலாகா வரிசையில் 1949 ஆகஸ்டு 15ந் தேதி போதி சத்துவரின் சிலை உருவம் ஒரு தபால் தலையில் தலைகீழாக அச்சடிக்கப்பட்டுவிட்டது. ஆனால் 1950 ஜூலை 15ந் தேதி அந்தப் போதி சத்துவரின் உருவம் சரியாகத் திருத்திவெளியிடப்பட்டது.

☐ 1937ம் ஆண்டு நிகாரகுவா தபால் தலையில் மத்திய அமெரிக்கா தேசப் படம் வரைந்திருந்தார் சித்திரக்காரர். தம் தேசமான நிகரகுவாவில் குவாடிமாலாவைச் சேர்ந்த ஒரு பகுதியையும் சேர்த்துக் கொண்டு விட்டார். இந்தத் தேசப் படம் பொறிக்கப்பட்ட தபால் தலை குவாடிமாலாவுக்குப் போனபோது கோபப்பட்ட மாணவர்கள் நிகரகுவா தூதுவராலயத்தின் முன்னால் ஆர்ப்பாட்டம் செய்தனர். போராட்டம் குழப்பத்தில் முடிந்து பன்னிரண்டு பேர் அந்தக் குழப்பத்தில் உயிர் துறந்தனர். நூற்றுக்கணக்கான பேர் இந்தக் குழப்பத்தில் அடிபட்டனர். ஒரு தபால் தலை வெளியீட்டில் விளைந்த விபரீதம் இது!

☐ ஜனாதிபதி ரூஸ்வெல்ட் தபால் தலை சேகரிப்பவர். தபால் தலைகளில் விழுந்த தபால் முத்திரைகளுக்குரிய ஊர்கள் எங்கிருக்கின்றன என்று அட்லாஸில் சரியாகப் பார்த்து வைத்துக் கொள்வாராம். இந்த மாதிரி பல இடங்களைத் தெரிந்து கொண்டது போரின்போது மிகவும் பயன்பட்டது. பசிபிக்கில் ஜப்பானியருக்கெதிராகப் போரிட அமெரிக்கத் துருப்புக்களை அனுப்பி வைக்கும் நிலைப் பற்றி ராணுவத் தலைவர்களுடனும் ஆஸ்திரேலிய, நியூஸிலந்து அதிகாரிகளுடனும் கலந்து ஆலோசித்துக் கொண்டிருந்தார். பசிபிக் தீவுகளுள் ஒரு தீவைச் சொன்னார் நியூஸிலந்து உதவிப் பிரதம மந்திரி. உடனே ரூஸ்வெல்ட் 'மாங்கரேவா' தீவு எதிரிகளைத் தாக்கக் கிட்டத்திலுள்ள சரியான தீவு என்று சொன்னார். அங்குள்ள அதிகாரிகளுக்கு 'மாங்கரேவா' எங்கிருக்கிறது என்றே தெரியவில்லை. தேசப் படத்தைக் கொணர்ந்து அந்தத் தீவைப் பற்றி ஆராய்ச்சி நடத்தினார்கள் அதிகாரிகள்.

அந்தச் சமயத்தில் ஜனாதிபதி ரூஸ்வெல்ட் "டாஹிட்டிய தபால் தலையில் மாங்கரேவா போஸ்ட் மார்க் இருந்தது. உடனே அந்தத் தீவைத் தேசப்படத்தில் வழக்கம் போல் பார்த்து வைத்தது இப்போது சரியான தருணத்தில் பயன்பட்டது!" என்றார்.

☐ தென்னிந்திய தபால் தலை சேகரிப்போர் சங்கம் 'தபால் தலையில் மிருகங்கள்' சேகரித்த பம்பாய் டி. ஆர். மிஸ்திரிக்குத் தங்கப் பதக்கம் வழங்கியிருக்கிறது.

ஆதாரம்: தென்னிந்திய தபால் தலை சேகரிப்போர் கழக மலர்.

—குண்டுமணி



# அம்மா



ரா. கணபதி

முந்திய ஆண்டு சாரதை அவமானத்தோடு தக்ஷிணேசுவரத்திலிருந்து பிறந்தகம் திரும்பினாள். அப்போது அவள் சபதமிட்டது ராமகிருஷ்ணருக்குத் தெரியாமலில்லை. அதற்காக இப்போது அவராக அவளுக்குத் தூது அனுப்புகையில் அவர் 'மன்னிப்பு' கேட்டு நாடகம் போடவில்லை. ஸ்வாதீன உரிமையோடும் அன்போடும் எழுதினார். தன்னைக் கவனிக்க ஆளில்லை என்றால் உடனே அவள் ஓடிவந்து விடுவாள் என்று அவருக்குத் தெரியும். என்றாலும் அப்படி வந்தால் அன்று அவள் காளியிடம் கேட்டுக்கொண்டது நிறைவேறாமல் அல்லவா போய்விடும்? 'நானாகத் திரும்புவதில்லை' என்றல்லவோ சபதமிட்டிருந்தாள்? அதனால் இப்போது ராமகிருஷ்ணர் தாமே அவளை 'நீ வரத்தான் வேண்டும்' என்கிறார். தம்மைத் தாழ்த்திக்கொண்டு அவளது சபதத்தைக் காக்கிறார். நாம் அழைத்து அவள் வருவதால் நடந்து வராமல் வாகனத்தில் வரவேண்டும், டோலியோ பல்லக்கோ வைத்துக் கொண்டு வரவேண்டும் என்கிறார். என்ன மரியாதைப் பண்பு பாருங்கள்! பரமேசுவரனுடன் மனம் பிணங்கியே சதிதேவி தக்ஷயக்ஞம் சென்றபோதுகூட சிவபெருமான் அவளைச் சிவிகை ஏற்றி அன்றோ அனுப்பி வைத்தார்? மாமியார் குடும்பத்துக்குத் திரவிய சகாயம் செய்திராத ராமகிருஷ்ணர், அவர்களுக்குத் தம்மால் செலவு ஏற்படுவதையும் அனுமதிக்கவில்லை. எனவேதான், காசு என்றாலே கூசும் ராமகிருஷ்ணர் சாரதையின் பயணச் செலவு எத்தனையானாலும் அதைத் தாமே ஏற்பதாகச் சொல்கிறார்.

ஏழெட்டு மாதங்களாக ஜயராம்பாடியில் மனம் குமைந்து அக்ஞாதவாசம் செய்துகொண்டிருந்த சாரதை இந்தத் தூது கிடைத்தவுடன் பதறிக்கொண்டு புறப்பட்டு விட்டாள். தானாக, தக்ஷிணேசுவரம் செல்லாமல் தனது பிரதிக்ஞையைக் காளிமாதா நிறைவேற்றி விட்டாள் என்ற பெருமிதமா அவளுக்கு இப்போது இருந்தது? இல்லை. இம்மியும் இல்லை. நோய் வாய்ப்பட்ட கணவர் சகாயமில்லாமல் கஷ்டப்படுகிறாரே என்ற சிந்தனை அவள் மனத்தை நிரப்பியது.

எனவேதான், முன்பு ஜகத்தாத்ரி விசர்ஜனத்தை மங்களமான வியாழனன்று செய்யக் கூடாது என்று விதித்த சாரதை, இன்று வியாழக்கிழமையன்றே பிறந்தகத்தை விட்டுப் புறப்பட்டாள்.

ஆனால் சமூகத்துக்கு வழிகாட்டப் பிறந்த அவள் ஒரு நியதியை மீறினால் தேவி சும்மா இருப்பாளா? தன் கைவரிசையை அவள் காட்டத்தான் செய்தாள்!

அம்பிகை கைவரிசையைக் காட்டியது ராமகிருஷ்ணரின் கையில் வந்து விடிந்தது.

ராமகிருஷ்ணர் பாவ சமாதியில் குதித்தாடிக் கொண்டிருந்தார். அவர் நிலைதடுமாறி விழுந்து விடாமல் பார்த்துக் கொள்ள ஹ்ருதயரும் இல்லை, சாரதாமணியும் இல்லையல்லவா? நீள நெடுக விழுந்து விட்டார். இடது கையில் ஓர் எலும்பு பிசகிக் கொண்டது. ஓசை கேட்டு அங்கிருந்தோர் ஓடி வந்தனர். வலிக்கும் கையைப் பிடித்துக் கொண்டு ராமகிருஷ்ணர் அமர்ந்திருக்கும் போது, அவரது கைப் பிடித்த புண்ணியவதி வந்து சேர்ந்தாள்.

வந்தவுடன் வந்தனம் செய்தாள் பதிதேவருக்கு. இனிமை மிக்க உறவின் இடையிலே வந்த சிறிய உறுத்தல் அந்த வந்தனத்தோடு ஓடிப் போயிற்று!

"எப்போ புறப்பட்டே?" என்று வினவினார் ராமகிருஷ்ணர்.

"வியாழக் கிழமை சாயங்காலம்" என்றாள் தேவி.

"பார்த்தியா, அதுதான் இந்தக் கையிலே அடிபட்டதற்குக் காரணம். ஆத்திலே பிறந்த பெண் இப்படி குருவாரம் சாயரட்சையிலே கிளம்பப்படுமோ? சரி, திரும்பி ஊருக்கே போயிட்டு, ஒரு நல்ல நாள் பார்த்துண்டு மறுபடி வா" என்று கூறினார் ராமகிருஷ்ணர்.

"சரின்னா, இப்பவே கிளம்பறேன்" என்று தன்னுடைய எளிய துணி மூட்டையைத் தூக்கிக் கொண்டாள்.

சென்ற முறை அவள் தக்ஷிணேசுவரம் வந்த போதும் உடனுக்குடன் திரும்பும்படி ஆயிற்று. ஆனால் அப்போது வேதனையில் விண்டு விரிந்து கொண்டு

கிளம்பினாள். இப்போது அன்புக் கணவரின் அறிவுரைக்கு அடிபணிந்து தாபம் இல்லாமலே புறப்படுகிறாள்.

முன் தடவை அவள் சென்ற கசப்பான நினைவு ராமகிருஷ்ணருக்கும் ஏற்பட்டது போலும். ''அம்மாடி, நீ இப்பவே போகணும்னு இல்லை.' இன்னிக்கு இங்கேயே சிரம பரிகாரம் பண்ணிக்கோ. நாளைக்குப் போ'' என்றார்.

அவ்விதமே சாரதாமணி மறு நாள் ஜயராம்பாடிக்குப் புறப்பட்டாள். நல்ல நாள் பார்த்துக் கொண்டு தக்ஷிணேசுவரத்துக்கு வந்து சேர்ந்தாள். இதன்பின் ராமலாலின் விவாகத்துக்காக ஒரே ஒரு முறை காமார்புகூர் போய் வந்தது தவிர ராமகிருஷ்ணரின் ஆயுள் முடிய அவள் அவருடனேயே இருந்தாள்.

மாமியார், மூத்த ஓரகத்தி, பைரவி பிராம்மணி, ஹ்ருதயர் என்றிப்படி யாரேனும் ஒருவரின் கட்டுப்பாட்டின் கீழேயே இதுவரை கணவரின் இருப்பிடத்தில் இருந்து வந்த சாரதை இப்போது தன்னைத் தானே கட்டுப்படுத்திக் கொண்டு வாழ்ந்தாள்.

அமைதியாக வாழ்ந்தாள்; அமைதி என்பதால் அதில் ஜீவ களை இல்லாமலில்லை.



கட்டுக்கோப்பாக வாழ்ந்தாள். அதனால் அதில் சுதந்திர சௌக்கியம் இல்லாமலில்லை.

பளிங்குபோல் வாழ்ந்தாள், தூய்மை பளிச்சிட்டாலும் அந்த வாழ்வில் கண்ணைக் கூச ஏதுமில்லை.

# 22. அம்மா ஆகிறாள்!

கன்னித் தாயாளும் !
மகனுக்கே மகளாளும் !
சின்னவளாம் எளியவளாம் !
சீரார் உன்னதங்களுமாய்
மன்னுயிர் அனைத்தினிலும்
மேம்பட்டாய், மேதக்காய் !
பின்னமற்ற சத்தியத்தின்
சங்கற்பம் சார்ந்துநின்றாய் !
காணுதற்கரிய மேல்நிலையில்
மேவிய நீ
மானுட இயல்புக்குள்
மிளிர்வித்த மகிமைகளின்
மாண்பு கண்டே மலைத்து, மங்கை,
நினைப் படைத்தபிரான்
தானும் உன் திருக்கரத்தில்
தயங்காமல் சேயானன் !

[—தாந்தே: பாரடிசோ: 33]

தக்ஷிணேசுவரத்திலே தேவி அநுசரித்த தினசரி நடவடிக்கைகள் அற்புதமில்லாமலே அற்புதமானவை. அவற்றை சாங்கோபாங்கமாகப் படிக்கும்போது, நம் அம்மாவுடனேயே நாம் வாழுவது போலிருக்கிறது !

சரியாக மூன்று மணிக்கு விழித்துக் கொண்டு விடுவாள் தேவி. அப்போது தான் நிம்மதியாக ஒன்றரை மணி ஜபம் புரிந்துவிட்டு, மற்ற வேலைகளை அவள் கவனிக்க முடியும். மூன்று மணிக்கு எழுவதில் அம்மா ரொம்பக் கறார். ஏனெனில், ஆரம்பத்தில் ஒரே ஒரு நாள் விட்டுக் கொடுத்ததில், மறுநாளும் சோம்பிப் படுத்திருக்கத் தோன்றியதால் 'உனக்காச்சு, எனக்காச்சு' என்று அன்றிலிருந்து மூன்று மணிக்கே விழித்துக் கொள்ளலானாள்.

ஏராளமான பண்டங்களின் அடைசலோடு மிக மிகக் குறுகலாக இருந்த நஹவத் அடியறை ஜபம் செய்வதற்குச் சிறிதும் உகந்த இடமல்ல. எனவே, வெளியே வந்து படியருகே அமர்ந்து ஜப யோகத்தில் தன்னை மறப்பாள்.

ராமகிருஷ்ணரும் புலருவதற்கு நீண்ட நேரம் முன்பே தோப்புக்குச் செல்வது வழக்கம். அப்போது ஒரு நாள், பகற்போதுகளில் அறையை விட்டு வெளியிலேயே வராத தேவி படியருகே சிலையாக அமர்ந்து ஜபித்துக் கொண்டிருப்பதைக் கண்டார். அகலமாகச் சிவப்புக் கரை போட்ட அவளது சேலை முந்தானி முகத்திலிருந்து நழுவி விழுந்தது கூடத் தெரியாமல் அந்தப் படி தாண்டாப் பத்தினி படி தாண்டி வந்து ஜபிப்பது கண்டு சிரித்துக் கொண்டார்!

காலை நாலரை மணிக்குள் கங்கையில் நீராடி விட்டுத் தேவி நஹவத்துக்குள் புகுந்துவிட்டால் அதன்பின் அவளை பரபுருஷர் யாருமே பார்க்க முடியாது. மாடிப் படிக்குக் கீழே சின்னஞ் சிறிய இடத்தில் தனது பென்னம் பெரிய குடும்பத்துக்காகத் தன்னந் தனியளாகச் சமைப்பாளோ, சமைப்பாளோ அப்படிச் சமைப்பாள் !

ஆம், பெரிய குடும்பம்தான். ராமகிருஷ்ணரின் முக்கியமான சீடர்கள் யாவரும் — பிரம்மசாரி சீடர்கள், கிருஹஸ்த சீடர்கள் யாவரும் — தக்ஷிணேசுவரத்துக்கு வரத் தொடங்கி விட்டார்கள். அவர்களுக்கெல்லாம் உணவு தயாரிக்க வேண்டும். அவரவர்களுக்குப் பிடித்த உணவைப் பார்த்துப் பார்த்துச் சமைப்பாள். பிற்காலத்தில் பிரம்மாநந்தராக ஆவதற்கு இருந்த ராகாலுக்குக் கிச்சடியில் மிகுந்த விருப்பம்; விவேகாநந்தராகப் பரிணமித்த நரேனுக்குப் பருமனாகவும், அதே சமயத்தில் உள்ளே குழல் குழலாக நன்கு வெந்துமுள்ள சப்பாத்தியிலும், பயத்தம் பருப்புக் கூட்டிலும் அலாதி இஷ்டம்; ராம் தத்தாவுக்கு மெல்லிய சப்பாத்தி பிடிக்கும். இப்படி அவரவருக்கும் பிடித்தமானதாகப் பார்த்துச் சமைப்பாள். ''சாதாரணமாக ஒரு நாளைக்கு மூன்று பெரிய படி கோதுமை மாவு பிசைந்து சப்பாத்தி செய்வேன்'' என்று பிற்காலத்தில் அன்னை சொல்லியிருப்பதிலிருந்தே, அன்னம், லூசி (அப்பம்), மற்ற வியஞ்சனங்கள் எவ்வளவு செய்திருப்பாள் என ஊகிக்கலாம். ராமகிருஷ்ணரின் மிருதுவான குடலுக்கேற்ப அன்றன்றும் கவனத்துடன் உணவு தயாரிப்பதுடன், இப்படிச் சீடர்களுக்கும் சமைப்பதென்றால் சாரதை தவிர வேறெவரும் முகத்தைச் சுளித்துக் கொண்டுதான் இருப்பர். ஆனால் அவளோ முகம் மலர்ந்து, மனம் அலர்ந்து சமைத்தாளோ, சமைத்தாளோ அப்படிச் சமைத்தாள் !

இந்த மலர்ச்சிக்குக் காரணம் இருந்தது. மகத்தான காரணம் அது. அந்தச் சீடர்கள் ராமகிருஷ்ணரை குரு மகராஜ் என்றும், டாகுர் என்றும்

# புதுமையின் பொலிவுக்கு
# ஹமாம்




நாள்தோறும் ஹமாம் தேய்த்துக் குளியுங்கள். ஹமாம் தரும் நறுமணமுள்ள நுரை உங்கள் சருமத்தை சுத்தம் செய்வதுடன், புத்துணர்ச்சியையும் அளிக்கிறது. உங்கள் மேனிக்கு கவர்ச்சியான மெருகையும் ஊட்டுகிறது. நெடுங்காலம்...நீடித்திருக்கும் ஹமாம் டாய்லெட் சோப்பை உபயோகியுங்கள்.

**அதிக காலம் நீடித்துழைக்கும் டாய்லெட் சோப்**

டாடா
தயாரிப்பு

CMTH-14-303 TAM

பரமஹம்ஸர் என்றும் அழைத்ததோடு நிற்கவில்லை. **அவர்கள் சாரதையை அம்மா என்று அழைத்தனர்.** ராமகிருஷ்ணருக்கு அவர்கள் சீடர்கள், பக்தர்கள் பணியாட்கள். சாரதைக்கோ அவர்கள் புத்திரர்கள், புத்திரர்கள், புத்திரர்கள் மட்டுமே.

அவர்கள் அம்மா என்று அழைத்தது அவளது சதைக்குள்ளே, தசைக்குள்ளே, ரத்தத்துக்குள்ளே, சித்தத்துக்குள்ளே, எலும்புக்குள்ளே, இதயத்துக்குள்ளே ஊடுருவிச் சென்றது.

'நான் அம்மா.... ஆஹா, கடைசியில் நான் அம்மாவாகவே இருக்கிறேன். எல்லா அம்மாக்களையும் போல அல்ல. பக்தியும், ஞானமும் கொண்ட அற்புதக் குழந்தைகளுக்கு அம்மாவாக இருக்கிறேன்' என்ற நிறைவிலே சாரதைக்கு வேறெந்த சிரமம் தெரியப் போகிறது?

ராமகிருஷ்ணர் அவளுக்கு இந்த அம்மாத் தன்மையை உணர்த்தியது அதியழகு! தமது சீடர்களை அவர் அவளுக்கு அறிமுகம் செய்கிற பாங்கும், அதன்பின் அவர்கள் பழகிக் கொள்கிற கிரமத்தை அவர் வகுத்துத் தந்த முறைமையும் அற்புதமானவை. சாரதைக்குத் தாம் வாக்குக் கொடுத்தபடியே அவளுக்கு மக்களை ஸ்வீகரித்துத் தந்தார். அவளை அவளாக ஆக்கினார். மந்திரோபதேசத்தாலும், ஞானோபதேசத்தாலும், வாழ்க்கை முறைகளைப் போதித்ததாலும் அவர் அவளைப் பூரண அவளாக்கி விட்டதாகச் சொல்ல முடியவில்லை. இந்தக் குழந்தைகளை அவளுக்குத் தந்தபோதே அவளைப் பூரண அவளாக ஆக்கினார்.

பூரணு எனப்பட்ட ஒரு பாலசீடனை அவர் அவளுக்கு அறிமுகம் செய்து வைத்த ஓர் உதாரணமே போதும்!

அந்தப் பிள்ளையைச் சாரதையின் முன்பு கொண்டு வந்து நிறுத்தினார் ராமகிருஷ்ணர். ''இவனுக்குச் சந்தனம் பூசு, ஹாரம் போடு. வயிறார விருந்து போடு'' என்றார்.

அவனுக்குச் சந்தனம் பூசியபோது, பிள்ளைச் சுமை அறியாமல் தகித்துக் கொண்டிருந்த சாரதையின் உதரம் சில்லெனக் குளிர்ந்து பூரித்தது.

அவனுக்கு மாலை போட்டபோது, மொட்டுக்கள் கட்டியிருந்த மாதாதத்துவம் சாரதையின் உயிருக்குள் மலர்களாக விகசித்தன.

அவனுக்கு நானாவித உணவு வகைகளைப் படைத்து, அவன் மகிழ்ச்சியுடன் உண்ணக் காணும்போது, சாரதை தன் அன்பின் அறுவடையை உயிர் புடைக்க உண்கிற ஆனந்தம் கண்டாள்.

ராமகிருஷ்ணர் இதையெல்லாம் கண்டு உள்ளுக்குள் உருகிக் கொண்டே நஹவத்துக்கும் தமது அறைக்குமாக உலவியபடியிருந்தார். அவ்வப்போது அவளிடம் வந்து பூரணனுக்குச் செய்ய வேண்டிய சின்னச் சின்ன — ஆனால் பொருள் பொதிந்த — உபசாரங்களை எடுத்துச் சொல்லுவார். அவளுக்குப் பிற்பாடு குறையே இருக்கக்கூடாது என்பதில் அவருக்கு அத்தனை கரிசனம்!

அம்மாவாக ஆவதற்கு அவாவினாள் சாரதை. ஆனால் அம்மாவாக எப்படி இருந்து காட்டுவது என்பதிலும் அவளுக்கும் அவரே பாடம் சொல்லித் தர வேண்டியிருந்தது!

பூரணன் கைகழுவப் போனான். ராமகிருஷ்ணரின் உந்தல் இன்றியே, பாவனையில் மட்டுமின்றி, செய்கையிலும் பூரண அம்மாவாகி விட்ட சாரதை, செம்பிலே நீரெடுத்து அவன் கையில் வார்த்தாள். அவன் வாய் கொப்புளிக்க நீர் வார்த்தாள்.

நம் தேசத்தில் குருமார்களும், குருபத்தினிகளும் தங்களது சீடர்களைப் போற்றி வளர்த்த அருமையை உபநிஷத காலத்திலிருந்து பார்க்கிறோம். ஆனாலும் இந்த குருவைப் போல், குருபத்தினி போல் இத்தனை அன்புமயமாக வேறு எவரேனும் இருந்திருப்பரா? இவர்கள் சீடர்களை மக்களாக மட்டுமா பார்த்தார்கள்? அவர்களை நாராயண ஸ்வரூபமாகவும் பார்த்து, அவர்களுக்கே தாங்கள் மக்கள் போலவும் அல்லவா ஒரொரு சமயங்களில் நடந்திருக்கின்றனர்? பூரணனுக்கு அவர்கள் செய்த உபசாரம் பரிபூரணனுக்கே செய்த பூஜையாகவே தோன்றுகிறது!

ராகாலுக்குக் கல்யாணமாகி அவர் புதுமணப் பெண்ணை தக்ஷிணேசுவரத்துக்கு அழைத்து வந்தார். ''மாமியார் மாட்டுப் பெண்ணை முதல் தடவை பார்க்கச்சே ரூபா கொடுக்கறது சம்பிரதாயம். அவளை (சாரதை) ஒரு ரூபாய் கொடுத்துட்டு இந்தப் புது மாட்டுப் பெண்ணைப் பார்க்கச் சொல்'' என்றார் ராமகிருஷ்ணர். வியக்தமாகப் பிள்ளை—மருமகள் உறவு சொல்லப்படுகிறது!

ராமகிருஷ்ணர் தமது பக்தர் குழாத்துடன் அவளுக்கு நிலைத்த உறவு ஏற்படுத்துவதில் மிகுந்த அக்கறை காட்டினார். உதாரணமாக, கல்கத்தாவில் பலராம் பாபுவின் மனைவிக்குக் கடுமையான காய்ச்சல் கண்டபோது, சாரதையிடம் ''நீ இப்போதே அவளைப் போய்ப் பார்த்து வா'' என்றார். தக்ஷிணேசுவரத்திலிருந்து அந்த வீடு ஐந்து மைல்களுக்கு மேலிருந்தது. சாரதைக்கு நடப்பது ஒரு பொருட்டல்ல. ஆனால் ஆனைப்

பட்ட டாகூரின் பத்தினி—அதுவும் பர்தா முறை அநுசரிக்கும் கோஷாப் பெண்மணி — ஒரு மாநகரின் நடுவீதியில் நடந்து சென்று வருவது யுக்தமாக இராது எனக் கருதினாள். ''வண்டி ஏதாவது வரட்டும், அப்புறம் போறேன்'' என்றாள். ''வண்டியாவது, இன்னொண்ணாவது? என் பலராம் வீட்டிலே ஒரு கஷ்டம் வந்திருக்கச்சே இதையெல்லாமா கவனிக்கிறது? நடந்து போ'' என்றார் அவர். நல்ல வேளையாக அருகில் இருந்த அடியார் ஒருவர் பல்லக்குத் தேடிப்பிடித்துக் கொணர்ந்தார்.

சாரதை சீடர்களிடம் நடந்து கொள்ள வேண்டிய முறையில் கண்டிப்புக் காட்டிய ராமகிருஷ்ணர், அதே கண்டிப்பைச் சீடர்களிடமும் காட்டி, அவர்கள் சாரதைக்குச் செய்ய வேண்டிய பணிகளை அறிவுறுத்தினார்.

ஒரு திருஷ்டாந்தம். சாரதை ஒரு குன்று கோதுமை மாவைப் பிசைய மாட்டாமல் பிசைந்து கொண்டிருக்கிறாள் நஹபத்திலே. சற்றுத் தள்ளி லாடு என்கிற பையன் தியானம் செய்கிறான். லாடுவைத் தியானத்திலிருந்து எழுப்புகிறார் ராமகிருஷ்ணர். ''எலே! அங்கே அம்மா அவஸ்தைப் பட்டுண்டிருக்கா. இப்போதான் உனக்குத் தியானம் வேண்டிக் கிடந்ததாக்கும். நஹபத்துக்குப் போய்க் கூடமாட கைங்கரியம் பண்ணு'' என்றார்.

நல்ல மாட்டுக்கு ஒரு சூடு என்பது போல், லாடு அன்றிலிருந்து ஒண்டிக்காரியான சாரதாவுக்குச் சகாயம் செய்யலானான். ராமகிருஷ்ணரின் தமையன் மகள் லக்ஷ்மியும் ஓரளவு உதவி செய்தாள். லக்ஷ்மிக்குப் பன்னிரண்டாவது வயதில் திருமணம் நடந்தது. அடுத்த ஆண்டே துரதிருஷ்டவசமாக அவள் கணவன் போன இடம் தெரியாமல் எங்கோ வெளியேறி விட்டான். அதன் பின் தக்ஷிணேச்வரத்துக்கு வந்து விட்ட லக்ஷ்மி சாரதைக்கு ஓரளவு ஒத்தாசை செய்ததோடு பிராண சகியாகவும் இருந்தாள்.

ராமகிருஷ்ணரை நாடிவந்த யோகின்—மா, கோலாப்—மா, கௌரி—மா போன்ற பெண்மணிகளும் இதே போல் சாரதையிடம் நெருக்கம் கொண்டனர். பரதேவதையின் இரு முக்கிய சேடியரான ஜயாவும், விஜயாவுமே சாரதை அவதாரத்திலே யோகின்—மா கோலாப்—மா என வந்தனர் என்று அடியார்கள் கூறுவர். ராமகிருஷ்ணரைப் போல் அவளும் அனைவருடைய அன்புக்கும் பாத்திரமாகி, அவரைப் போலவே அனைவரிடமும் அன்பைப் பொழிந்தாள். இச்சரிதத்தைத் தொடரும்போது, 'அவரைப்போல' என்னாமல் 'அவரைக் காட்டிலும்' என்றே தயங்காமல் சொல்வீர்கள்! அவர்களுக்கும் ராமகிருஷ்ணரை விடச் சாரதையிடமே அதிக அன்பு பெருகிற்று என்று கூறலாம். ராமகிருஷ்ணர் இவ்விஷயத்தை வியக்தமாகவே வெளிக் கொண்டு வந்திருக்கிறார். ஒரு நாள் சாரதையை வைத்துக் கொண்டே கௌரி மாவிடம் அவர் பட்டவர்த்தனமாகக் கேட்டார்: ''கௌர்தாஸி! எங்கள் இருவரில் உனக்கு யாரிடம் அதிகப் பிரியம்?''

கௌரி—மா மிகவும் புத்திசாலினி. எனவே நேரிடையாக வசன நடையில் பதில் சொல்லி இந்த உயரிய விஷயத்தைச் சாமானியமாக்கி விடாமல், ஒரு பழம் பாடலைப் பாடினாள்:

**அரியகுழலோனே! உன் அன்புரு ராதைக்கு நீ**
**பெரியவனோ புகல்வாய்! தெரியவில்லோம் யாமே!**
**வேதனையில் மக்கள் ''மதுசூதனா'' என்றழைப்பர்;**
**வேதனையுற்ற நீயோ, ''காதலி ராதே'' என்பாய்!**

ராமகிருஷ்ணர் வேடிக்கை போல் சிரித்துக் கொண்டே பெரிய கேள்வியைப் போட்டார். கௌரியம்மாளும் வேடிக்கை போல் சிரித்துக் கொண்டே பெரிய விடையைப் பாடி விட்டாள்!

எல்லையில்லாத வெட்கம் கொண்ட சாரதை, கௌரி மாவின் கையைப் பிடித்து அழுத்தினாள்.

''ஊம், அபஜயத்தை நானாக வாங்கிக் கட்டிக் கொண்டேன்'' என்று கூறிக் கொண்டே பொன்னகையுடன் நகர்ந்தார் ராமகிருஷ்ணர்.

'எங்கள் இருவரில் யாரிடம் அதிகப் பிரியம்?' என்று கௌரியம்மாளிடம் கேட்டது போலவே, 'எங்கள் இருவரில் யாருக்கு அதிக தேஜஸ்?' என்று ஒரு முறை அவர் சாரதையிடம் கேட்டார்.

### ஆசைக்கும் அளவு வேண்டும்

உலக சுக சாதனங்களைப் பெருக்கி சந்தோஷம் ஏற்படுத்துவது பற்றி இப்போது நிறைய பேசப்படுகிறது. இது ஜனங்களின் ஆசையைப் பெருக்குவதேயாகிறது. ஆசை பெருகுவது மனக்கலக்கத்தை அதிகரிப்பதேயாகும். இதன் விளைவாக உலகிலுள்ள சகல வஸ்துக்களும் கிடைத்தாலும் போதாது என்று ஜனங்கள் நினைக்கிற நிலை ஏற்படும். சுக சாதனங்களைப் பெருக்கிக் கொள்கிற முயற்சிக்கு முடிவே இராது. எனவே மனக்கலக்கமும் தீரவே தீராது. சாந்தியாக இருக்கவேண்டுமானால், முதலில் 'இவ்வளவு போதும்' என்று நம் தேவைகளுக்கு எல்லை வகுத்துக் கொள்ள வேண்டும். நாம் இங்கிருந்து கடைசியில் புறப்படுகையில் ஒன்றுமே நம்மோடு வரப்போவதில்லை என்று தெரிகிறபோது, உலக வஸ்துக்களுக்கு இவ்வளவுதான் பாடுபடுவது என்று ஒரு வியவஸ்தை வைத்துக்கொள்ள வேண்டாமோ?

- ஸ்ரீசந்திரசேகர பாரதி ஸ்வாமிகள்

> கடவுள் எல்லா இடங்களிலும் வெளிப்பட முடியவில்லையாம்; எனவேதான், அம்மா என்பவளைச் சிருஷ்டி செய்தார்.
>
> - யூதப் பழமொழி

அவருக்குப் பக்கத்திலே நின்றார் பக்தர் ஒருவர். அவரையும் தம்மையும் சேர்த்துத்தான் 'எங்கள் இருவர்' என்றார்.

அக்காலத்தில் ராமகிருஷ்ணர் ஸ்வர்ண விக்கிரகமாக விளங்கினார். அவர் கையிலே யாரோ தங்கத் தாயத்துக் கட்டியிருந்தார்களாம். அந்தத் தங்கத்துக்கும் அவரது சருமத்துக்கும் மாறுபாடே தெரியாது. அந்தப் பொன்னார்மேனியரின் சீடர்களுள் மேலே குறிப்பிட்ட மனிதர் நல்ல சிவப்பு. ராமகிருஷ்ணர் குழந்தைபோல் அனைவரிடமும் 'எங்கள் இருவரில் யாருக்கு அதிக தேஜஸ்?' என்று கேட்டார். எல்லோரும் ராமகிருஷ்ணருக்கே 'வோட்'டுப் போட்டனர். அவர் "சாரதைதான் சரியான மத்தியஸ்தம் செய்வாள்" என்று அவளிடம் வந்தார் — மண்டன மிச்ரர் ஆதிசங்கரருடன் வாதம் நடத்திய போது, சரஸ்வதியின் பூர்வ அவதாரமான தமது மனைவி சரஸவாணியை மத்தியஸ்தம் வைத்ததுபோல்.

காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு அல்லவா? நம் அம்மா சாரதையின் கண்களுக்குச் சீடரே அதிக தேஜஸ்வியாகத் தெரிந்தார்! "உங்களை விட அவருக்குத்தான் தேஜஸ் அதிகம்" என்று சொன்னாள்! அவள் சொல்லவில்லை. அன்னையன்பு சொல்லிற்று!

அவளுள் இருந்த அன்னையை வெளிப்படுத்தியதுபோலவே அவளில் ஒளிந்திருந்த அனுக்கிரக சக்தியையும் வெளிப்படுத்தினார் ராமகிருஷ்ணர். ஓர் உதாரணம்:

காளிபாத கோஷ் துன்மார்க்கத்தில் ஆழ்ந்து விட்டார். குடும்பம் சர்வநாசமாகாமல் அவரை மீட்டுத் தர வேண்டுமென ராமகிருஷ்ணரிடம் வந்து முறையிட்டாள் ஸ்ரீமதி கோஷ். அசட்டுத்தனமாக "எனக்கு ஏதேனும் வசிய மந்திரம் சொல்லித் தாருங்கள்" என்று வேண்டிக் கொண்டாள்.

அந்த வார்த்தையைக் கேட்டதுமே புண்ணியமூர்த்தியின் உடல் அருவருத்துக் கூசியது. காருண்ய மூர்த்தியன்றோ அவர்? உடனே தம்மைச் சமாளித்துக் கொண்டு, ஹாஸ்யம்போல் தோன்றும் தமது இயல்பான உயர்நிலைக்குத் திரும்பினார்.

"ஆத்துக்காரரை வசியம் பண்ணணும், அவ்வளவுதானே? எங்கிட்ட உபாயம் கேட்டு என்ன பிரயோஜனம்? என்னை வசியம் பண்ணி வச்சிருக்காளே, அந்த நஹவத்—அம்மாதான் வசிய மந்திரத்திலே நிபுணி. அவளிடம் போய்க் கேளுங்கோ!" என்றார்.

பூஜை முடித்து, ஒரே கருணை வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்த சாரதையிடம் வந்து தன் பிரார்த்தனையைத் தெரிவித்தாள் கோஷின் மனைவி.

அவளிடம் மிகுந்த பரிவும் பரிதாபமும் சாரதைக்கு உண்டாயின. ஆனாலும் அவளுக்கு வசிய மந்திரம் ஏதும் தெரியாதே! 'துன்புற்று வந்த இந்தக் குழந்தையிடம் டாகூருக்கு என்ன விளையாட்டு வேண்டிக் கிடந்தது? வசிய மந்திரம் என்றில்லாவிடினும் அவளுக்கு ஞானம் உண்டாகும்படியான மந்திரம் எதையாவது அவர் உபதேசித்திருக்கக் கூடாதா?' என்று எண்ணினாள்.

"குழந்தே! எனக்கொண்ணும் மந்திரம் தெரியல்லே! டாகூர் கிட்டயே திரும்பிப் போய் முறையிடு! அவர் உன்னைக் காப்பாத்துவார்" என்றாள்.

அவரோ இன்னும் குறும்பை முடிப்பதாக இல்லை. "நஹவத்—அம்மா எப்பவுமே இப்படித்தான் பிகுக்காரம் பண்ணிக்குவா. நீ விடாதே. அந்த அம்மாவையே கெட்டியாகப் பிடிச்சுக்கோ. என் வார்த்தையை நம்பு. வசியம் பண்றத்துலே என்னைவிட அவளுக்குத்தான் ஜாஸ்தி ஸித்தி" என்றார்.

கோஷின் பேதை மனைவி மீண்டும் சாரதையிடம் வந்து நின்றாள்.

சாரதையின் தாய் மனசு கரைந்துருகிற்று. இந்த மனசு கரைந்துவிட்ட பின், சர்வத்துக்கும் தாயாக ஒருத்தி இருக்கிறாளே, அந்தத் தாயின் மனசு மட்டுமே நின்றது. வழக்கத்துக்கு மாறான எழுச்சி கொண்டாள் சாரதை. பூஜையின்போது தான் அர்ச்சித்திருந்த ஒரு வில்வ பத்திரத்தை எடுத்து கோஷின் மனைவியிடம் கொடுத்தாள். "குழந்தாய், இதை வீட்டுக்கு எடுத்துண்டு போ! உன் ஆசை பூர்த்தி ஆயிடும்" என்றாள்.

சாரதையை மகிழ்ச்சியுடன் வணங்கி, வில்வ இலையுடன் வீடு சென்றாள் ஸ்ரீமதி கோஷ்.

அன்றிலிருந்தே காளிபாதரின் மனப்போக்கு மாறத் தொடங்கி விட்டது! நாளாவட்டத்தில் அவர் சன்மார்க்கத்துக்குத் திரும்பி விட்டார். ராமகிருஷ்ணரின் மெய்யடியார் ஆனார்.

இந்த நிகழ்ச்சி மூலம்தான் சாரதை தனக்கு அனுக்கிரக சக்தி என்பதாக ஒன்று இருக்கிறது என்பதையே அறிந்து கொண்டாள். [தொடரும்]



## மதிப்புக்குரிய அன்னை

செட்டிநாட்டரசி

# உயர்திரு ராணி லேடி மெய்யம்மை ஆச்சி

11-10-1905 :: 1-3-1970

இரண்டு ஆண்டுகளுக்கு முன் இதே தினம் (1-3-1970) எங்களை விட்டுப் பிரிந்தும் எங்கள் நெஞ்சை விட்டகலாமல் என்றும் நிலைத்திருக்கும்

# ராணி அம்மா

என்று அன்புடன் அழைக்கப்படும்

## கொடைவள்ளல்

**மாண்புமிகு செட்டிநாட்டரசியாருக்கு**

*வணக்கம் செலுத்தி*
*அன்னார் ஆற்றிவந்த நற்பணிகளைத் தொடர்ந்து*
*மேற்கொள்வதென உறுதி கொள்கிறோம்.*

**கீழ்க்கண்ட நிறுவனங்களின் நிர்வாகத்தினரும் பணியாளர்களும்**

ராணி மெய்யம்மை உயர்நிலைப்பள்ளி, காந்திநகர், சென்னை ○ ராணி மெய்யம்மை பெண்கள் உயர்நிலைப்பள்ளி, ராஜா அண்ணாமலைபுரம், சென்னை ○ செட்டிநாடு கார்ப்பரேஷன் (பிரைவேட்) லிட்., ○ மதுரை சௌத் இந்தியா கார்ப்பரேஷன் (பிரைவேட்) லிட்., ○ சௌத் இந்தியா கார்ப்பரேஷன் (பிரைவேட்) லிட்., ○ லோட்டஸ் மில்ஸ் லிட்., ○ சௌத் இந்தியா கார்ப்பரேஷன் (திருவாங்கூர்) பிரைவேட் லிட்., ○ ஸ்ரீ கருணாம்பிகை ஜின்னிங் பேக்டரி ○ டுபாரி குரூப் எஸ்டேட்ஸ் ○ மேபீஸ்வர் எஸ்டேட் ○ தொட்லக்கூண்டா எஸ்டேட் ○ சேஷகிரி எஸ்டேட் ○ குண்டல்லி எஸ்டேட்.

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## முடிவுரை

நேயர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். மூன்றரை ஆண்டு காலம் ''பொன்னியின் செல்வன்'' கதையைத் தொடர்ந்து படித்து வந்ததில் நேயர்கள் காட்டிய பொறுமையையும் ஆர்வத்தையும் அன்பையும் போற்றி வணங்குகிறேன். கதை ஆரம்பித்துச் சில மாதங்கள்வரையில் நேயர்களிடையே இது இவ்வளவு ஆர்வத்தை உண்டாக்கும் என்று தோன்றவில்லை. பழந்தமிழ் நாட்டுச் சரித்திரப் பெயர்கள் சிலருக்குப் பெரிதும் தலைவேதனை உண்டாக்கி வந்ததாகத் தெரிந்தது. போகப் போக, அந்தத் தலைவேதனையை நேயர்கள் எப்படியோ போக்கிக் கொண்டார்கள். இதற்கு முன்னால் எந்தத் தொடர்கதையையும் நேயர்கள் இவ்வளவு ஆர்வத்துடன் படித்ததில்லை என்று சொல்லும் நிலைமை வெகு விரைவில் ஏற்பட்டது. அதே ஆர்வம் தொடர்ந்து நிலைபெற்று இருந்து வந்தது.

கதை ஆரம்பித்த மறு வருடம் ஆடிப் பதினெட்டாம் பெருக்கு தினத்தில் பரமக்குடியிலிருந்து பல நண்பர்கள் கையெழுத்திட்டுப் '' பொன்னியின் செல்வன் '' கதைக்குத் தங்கள் பாராட்டுதலைத் தெரிவித்தார்கள். 'பொன்னியின் செல்வன்' முதல் அத்தியாயம் பதினெட்டாம் பெருக்குத் திருவிழாவன்று வீர நாராயண ஏரிக் கரையில் தொடங்குகிறது அல்லவா?

பின்னர் அடிக்கடி பல நேயர்கள் கடிதம் எழுதித் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டிருந்தார்கள்.

இந்தப் பாராட்டுதல்களையெல்லாம் கதையின் ஆசிரியருக்குரியவையாக நான் கருதவில்லை. பழந் தமிழ் நாட்டின் சரித்திரத்துக்குரிய பெருமையாகவே கருதினேன். உண்மையிலேயே, தமிழ் நாட்டின் பழைய வரலாறு தமிழர்கள் மிகவும் பெருமிதம் கொள்ளக்கூடிய வரலாறுதான். சென்ற சில ஆண்டுகளாகத் தான் தமிழகத்தின் பழைய சரித்திர ஆராய்ச்சி முறையாக நடைபெற்று வருகிறது. கல்வெட்டுக்களும் செப்புப் பட்டயங்களும் படிக்கப்பட்டு வருகின்றன. வரலாற்று ஆராய்ச்சியாளர் அந்த ஆதாரங்களை வைத்துத் தமிழகத்தின் சரித்திரத்தை அங்கங்கே பகுதி பகுதியாக நிர்மாணித்து வருகிறார்கள்.

சரித்திரத்தின் எந்த ஒரு காலப் பகுதியைப் பற்றியும் பரிபூரணமாகவும் ஐயந்திரிபுக்கு இடமின்றியும் வரலாறு எழுதப்பட்டு விட்டதாகச் சொல்வதற்கில்லை.

ஆயிரத்து நானூறு வருடங்களுக்கு முன்னால் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு நீடித்து அரசு புரிந்த பல்லவ சக்கரவர்த்திகளின் வரலாறு ஓரளவு ஆராயப்பட்டிருக்கிறது. அந்த இருநூறு ஆண்டுகளைப் பற்றிய சரித்திர வரலாற்று விவரங்கள் நன்கு தெரிய வந்திருக்கின்றன.

பின்னர், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் தொடங்கி முந்நூறு ஆண்டு புகழுடன் விளங்கிய விஜயாலய சோழ பரம்பரையின் காலத்து நிகழ்ச்சிகளும் ஓரளவு ஆராயப்பட்டிருக்கின்றன. இக்காலத்து நிகழ்ச்சிகளைப் பற்றித் திட்டமாக நிர்ணயிக்க முடியாதபடி பல ஐயப்பாடுகள் தோன்ற இடமிருக்கிறது. ஆயினும், சில சரித்திரச் சம்பவங்கள் மறுக்க முடியாத தகுந்த ஆதாரங்களுடன் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன.

இவற்றிலெல்லாம் முக்கியமானது, தமிழகத்துக்கு இணையற்ற பெருமையை அளிக்கக் கூடியது, உலக சரித்திரத்திலேயே ஒப்பற்ற சம்பவம் என்று கொண்டாடுவதற்குத் தகுதியானது ஒன்று உண்டு. சுந்தர சோழரின் இரண்டாவது திருக் குமாரனாகிய அருள்மொழிவர்மன், (பிற்காலத்தில் இராஜ ராஜ சோழன் என்று புகழ் பெற்ற பேரரசன்) இளம் பிராயத்தில் தான் எளிதில் பெற்றிருக்கக் கூடிய சோழ சாம்ராஜ்யத்தை வேண்டாம் என்று மறுத்து, உத்தம சோழனுக்குப் பட்டம் கட்டி வைத்ததுதான்.

''சுந்தர சோழனுக்குப் பின்னர் அவனுடைய மகன் அருள்மொழிவர்மனே சோழ சிங்காதனம் ஏறி அரசாள வேண்டும் என்று சோழநாட்டு மக்கள் பெரிதும் விரும்பினார்கள். ஆயினும் அருள்மொழிவர்மன் தன் பெரிய பாட்டனாகிய கண்டராதித்தனுடைய புதல்வனும் தனக்குச் சிறிய தகப்பன் முறையினருந்தவனுமான உத்தம சோழனுடைய உரிமையை மதித்து அவனுக்கு முடிசூட்டி வைத்தான்'' என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் அறுதியிட்டு உறுதி கூறுகின்றன.

இந்த நிகழ்ச்சியை மற்றும் பல செப்பேடுகளும் கல்வெட்டுகளும் அந்தக் காலத்தில் அறிஞர்கள் பலரால் எழுதப்பட்ட நூல்களும் உறுதிப்படுத்துகின்றன.

அருள்மொழிவர்மன் திருமுடி சூட்டிக் கொள்ள வேண்டுமென்று இராஜ்யத்தின் மக்கள் விரும்பினார்கள், உற்ஞர் உறவினர் விரும்பினார்கள். அக்காலத்தில் மிக்க வலிமை பெற்றிருந்த சோழப் பெரும் படையின் வீரர்கள் அனைவரும் விரும்பினார்கள்.

அவ்வாறு எல்லாவித ஆதரவும் அநுகூலங்களும் அருள்மொழிவர்மனுக்கு இருந்தும், அவன் சாம்ராஜ்யத்தை உத்தம சோழனுக்கு அளித்துப் பட்டம் கட்டுவித்தான்.

உலக சரித்திரத்திலும் காவிய இதிகாசங்களிலும் இதற்கு ஒப்பான இன்னோர் அரும் பெரும் செயலைக் காணுதல் அரிது.

அசோக சக்கரவர்த்தி கலிங்க நாட்டுப் போரில் மகத்தான வெற்றி அடைந்த பிறகு, ''இனி யுத்தமே வேண்டாம்'' என்று முடிவு செய்ததைத்தான் அருள்மொழிவர்மன் தியாகத்துக்கு இணையாகக் கூறலாம்.

''பொன்னியின் செல்வன்'' கதையில் சிகரமான சம்பவம் அருள்மொழிவர்மனின் ஒப்பற்ற தியாகமேயாகும். கதையில் வரும் சகல நிகழ்ச்சிகளும் இந்த மகத்தான சம்பவத்தை நோக்கியே சென்று கொண்டிருக்கின்றன. அதனாலேயே இக்கதையின் ஐந்தாவது



பகுதிக்குத் ''தியாக சிகரம்'' என்று பெயர் தரப்பட்டது.

இக்கதையின் சிகரமான நிகழ்ச்சி பொன்னியின் செல்வன் செய்த சாம்ராஜ்ய தியாகந்தான் என்பதைக் கதையைப் படித்து வந்த நேயர்கள் அனைவரும் உணர்ந்திருப்பார்கள் என்றே நம்புகிறேன். யாராவது அதை அறியவில்லை யென்றால், அதற்குக் காரணம் ஆசிரியருடைய ஆற்றல் குறைவு என்றே சொல்ல வேண்டும். அந்தக் குறையைக் கதை ஆசிரியர் தாழ்மையுடன் ஒப்புக் கொண்டு நேயர்களிடம் மன்னிப்புக் கோர வேண்டியதுதான்.

''பொன்னியின் செல்வன்'' கதை வெளியாகி வந்த போதெல்லாம் நேயர்கள் ஒப்பற்ற ஆர்வம் காட்டி வந்தார்கள். பலர் பாராட்டிக் கடிதங்கள் எழுதி உற்சாகப்படுத்தியும் வந்தார்கள். நேயர்களிடமிருந்து வந்த கடிதங்களில் அப்போதெல்லாம் கருத்து வேற்றுமையே காணப்படவில்லை.

கதை முடிவடைந்த பிறகும் நூற்றுக் கணக்கான கடிதங்கள் வந்திருக்கின்றன. இக்கடிதங்களில் பெரிதும் கருத்து வேற்றுமை காணப்படுகிறது. பாதிப் பேர் கதையைப் பாராட்டிக் கதை முடிவையும் பாராட்டியிருக்கிறார்கள். இன்னும் பாதிப் பேர் கதை முடிந்த விதத்தைக் குறை கூறியிருக்கிறார்கள். சட்டென்று முடித்து விட்டதற்காகவும் பல கதாபாத்திரங்கள் பின்னால் என்ன ஆனார்கள் என்று சொல்லாமலே கதையை முடித்து விட்டதற்காகவும் வருந்தியிருக்கிறார்கள். காரசாரமாகக் கண்டனங்கள் எழுதியிருப்பவர்களும் உண்டு.

கண்டனமாகவும் குறை சொல்லியும் எழுதியிருப்பவர்கள் அனைவரும்கதையை இன்னும் வளர்த்தி எழுதியிருக்கலாம் என்றே அபிப்பிராயம் தெரிவித்திருப்பதை எண்ணி ஒருவாறு திருப்தி அடைகிறேன். மூன்றரை ஆண்டு தொடர்ந்து வெளியாகி வந்த கதையைக் குறித்து அலுப்பு அடைந்து, ''எப்போது முடிக்கப் போகிறீர்?'' என்று கேளாமல், ''ஏன் இப்படித் திடுதிப்பென்று முடித்து விட்டீர்? ஏன் மேலும் வளர்த்தி எழுதியிருக்கக் கூடாது?'' என்று நேயர்கள் கேட்பது ஒருவாறு மகிழ்ச்சி அடைவதற்குரிய நிலைமைதான். ஆயினும் நேயர்களில் ஒரு பெரும் பகுதியினரைத் திருப்தி செய்ய முடியாமற்போனது பற்றி வருந்துகிறேன்.

''பொன்னியின் செல்வன்'' கதையை இப்போது முடித்திருப்பது போல் முடித்ததற்கு இரண்டு முக்கிய காரணங்கள் உண்டு.

1. முன்னமே குறிப்பிட்டது போல், கதையில் சிகரமான நிகழ்ச்சி பொன்னியின் செல்வன் தன் கையில் கிடைத்த மகா சாம்ராஜ்யத்தைத் தியாகம் செய்து இன்னொருவருக்கு முடிசூட்டியதேயாகும்.

ஆகையால், அந்தப் பெரு நிகழ்ச்சிக்குப் பிறகு கதையை வளர்த்திக் கொண்டு போவது ஆங்கிலத்தில் சொல்லப்படுவது போல், 'கிளைமாக்ஸ்'க்குப் பிறகு 'ஆண்டி கிளைமாக்ஸ்'க்குப் போவதாக முடியும்.

நேயர்கள் பலர் இப்போது சீக்கிரம் முடித்துவிட்டதற்காகக் குறை சொன்னாலும், இந்தக் கதை மேலும் வளர்ந்தால் விரைவில் அதே நேயர்கள் வேறுவிதமாகக் குறைப்பட நேரிடும். ''எப்போது முடிக்கப் போகிறீர்?'' என்று ஆசிரியரை நேயர்கள் கேட்கும் நிலைமை விரைவில் வந்துவிடும்.

2. பொதுவாக 'நாவல்கள்' எழுதுவதற்கும், முக்கியமாகச் 'சரித்திர நவீனங்கள்' எழுதுவதற்கும் சட்ட திட்டங்கள் ஏற்பட்டிருக்கவில்லை. (அப்படி ஏற்பட்டிருந்தால் அவற்றை நான் படித்ததில்லை.) ஒவ்வொரு ஆசிரியர் தமக்குரிய முறையை வகுத்துக் கொண்டு எழுதுகிறார்கள்.

ஆயினும், முழுதும் கற்பனையாக எழுதப்படும் சமூக வாழ்க்கை நவீனங்களுக்கும், சரித்திரச் சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதும் நவீனங்களுக்கும் ஒரு வேற்றுமை அவசியம் இருந்து தீருகிறது.

முற்றிலும் கற்பனை செய்யப்பட்ட கதைகளில் வரும் பாத்திரங்களில் எல்லாருக்கும் கதை ஆசிரியர் சுலபமாக முடிவு சொல்லிவிடலாம். கதாநாயகனும் கதாநாயகியும் கல்யாணம் செய்து கொண்ட பிறகோ, அல்லது கதாநாயகன் தூக்குமேடை ஏறியும் கதாநாயகி கடலில் விழுந்தும் இறந்த பின்னரோ கதையில் வரும் மற்றப் பாத்திரங்களை ஒரு பாராவில் சரிப்படுத்தி விடலாம். கல்யாணம் செய்துகொண்ட தம்பதிகள் பிள்ளை குட்டி பேரர்களைப் பெற்று நெடுங் காலம் சுகமாக வாழ்ந்தார்கள் என்றும், மற்றக் கதாபாத்திரங்களில் நல்லவர்கள் எல்லாரும் சுகமடைந்தார்கள் என்றும், கெட்டவர்கள் எல்லாரும் பல கஷ்டங்கள் பட்டுச் செத்தொழிந்தார்கள் அல்லது தக்க தண்டனை அடைந்தார்கள் என்றும் கூறிக் கதையைத் திருப்திகரமாக முடிக்கலாம்.

# தேசத்தை முன்னேற்றப்பாதையில் இயக்கிச் செல்லும் சக்கரங்கள்

சககர்ங்கள் பல தொழில்களை இயககுகின்றன. உதாரணமாக, ரயில்கள் கிராமங்களையும் நகரங்களையும் இணைக்கின்றன; விற்பனைச்சரக்குகளை மார்க்கெட்டுகளுடன் இணைக்கின்றன; நாட்டின் ஒவ்வொரு பகுதியையும் மற்றப் பகுதிகளுடன் இணைக்கின்றன. டாடாவின் தண்டவாளங்கள், எஃகுச்சக்கரங்கள் மற்றும் ஆக்ஸில்கள் மக்களையும், பொருள்களையும் இப்பாரத நாட்டின் பல்வேறு இடங்களுக்கும் கடத்திச் செல்லுகின்றன.
நாட்டின் முன்னேற்றத்திற்கான இணைப்புத் துறையில் எஃகு ஈடற்ற முக்கியத்துவம் வகிக்கிறது. உறுதியான உழைப்பு, உபயோகம் மற்றும் பணமுதலீட்டின் முழு மதிப்பையும் கிடைக்க வழி செய்வதில் அது ஈடு இணையற்றது.
அக்காரணத்தினால்தான் நாங்கள் ஏராளமான நேரம், உழைபபு மற்றும் பணம் இவற்றை டாடாவின் முத்திரையுள்ள பொருள்களை மேலும் மேலும் சீராக்குவதில் செலவிடுகிறோம்.
இந்தியப் பொருளாதாரத்தை சீராக்க ஊக்கமளிப்பது டாடா ஸ்டீல்.

**டாடா ஸ்டீல்**



சரித்திரக் கதைகளை இந்தவிதத்தில் முடிப்பது அவ்வளவு எளிய காரியமும் அன்று; உசிதமும் ஆகாது.

சரித்திரக் கதைகளில் வரும் பாத்திரங்களில் இறந்து போனவர்களைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் பிற்காலத்திலும் பற்பல காரியங்களில் ஈடுபடுவார்கள்; வெற்றியோ, தோல்வியோ சுகமோ, துக்கமோ அடைவார்கள். அவற்றைக் குறித்து முன்னதாகவே சொல்லி விடுவது முறையாகுமா? அல்லது ஆதாரங்களுடன் கூடிய விவரங்கள் இல்லாமல் முடிவான நிகழ்ச்சிகளைப் பற்றி மட்டும் சொல்லுவதுதான் உசிதமாகுமா?

கதையை எந்தக் காலத்தில் முடிக்கிறேமோ, அந்தக் காலத்தில் பாத்திரங்கள் இருந்த நிலைமையிலேயே விட்டுவிடுவதுதான் முறையென்று கருதினேன். ஆனால் இது பல நேயர்களுக்குத் திருப்தி அளிக்கவில்லையென்பதைக் காண்கிறேன். ஓரளவேனும் அவர்களைத் திருப்தி செய்விக்க வேண்டியது அவசியம் என்று உணருகிறேன்.

பல நேயர்கள் அறிந்துகொள்ள விரும்பும் விவரங்களைக் கேள்விகள் ரூபத்தில் இதோ கோவைப்படுத்தித் தந்திருக்கிறேன்:—

1. வந்தியத் தேவர் இளவரசி குந்தவைப் பிராட்டியை மணந்தாரா?
2. கோட்டைத் தளபதி சின்னப் பழுவேட்டரையர் என்ன ஆனர்?
3. வீர வைஷ்ணவனை ஆழ்வார்க்கடியான் என்ன செய்தான்?
4. பொன்னியின் செல்வரின் பிரயாணம் என்ன ஆயிற்று?
5. பழைய மதுராந்தகரும் சின்னப் பழுவேட்டரையரின் மகளும் என்ன ஆனர்கள்?
6. நந்தினியினல் முடிசூட்டப்பட்ட இளம் பாண்டியனைப் பற்றிய விவரம் என்ன?
7. நந்தினியின் கதி என்ன?
8. வானதி விஷயமாகக் குடந்தை சோதிடர் கூறியவை பலித்தனவா?
9. ஆபத்துதவிகள் என்ன செய்தார்கள்?

மேற்கூறிய கேள்விகள் பலவற்றுக்குப் பதில்களைத் தமிழ் நாட்டுச் சரித்திரம் படித்தவர்கள் தாங்களே அறிந்து கொள்வார்கள். ஆயினும் அனைவருக்கும் திருப்தி அளிக்கும் பொருட்டு மேற்கண்ட கேள்விகள் எல்லாவற்றுக்கும் பதில் தந்து விடுகிறேன்.

1. மேலும் பல இடையூறுகளைத் தாண்டிய பிறகு குந்தவையும் வந்தியத்தேவனும் மணம் செய்து கொள்கிறார்கள். இருவரும் சோழ சாம்ராஜ்யத்தில் மிக மதிக்கப்படுகிறார்கள். தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள கல்வெட்டு ஒன்றில், ''இராஜ ராஜ தேவரின் திருத்தமக்கையார், வல்லவரையர் வந்தியத் தேவரின் மகாதேவியார், ஆழ்வார் பராந்தகர் குந்தவையார்'' என்று பொறிக்கப்பட்டு விளங்குகிறது.
2. இரும்பு மனிதராகிய சின்னப்பழுவேட்டரையர் உயிர் பிழைத்துப் பல கஷ்டங்களை அநுபவித்த பிறகு ஊருக்குத் திரும்பி வருகிறார். சோழ சாம்ராஜ்யத்துக்குப் பல அரிய சேவைகள் புரிகிறார்.
3. வீர வைஷ்ணவன் ஆழ்வார்க்கடியான் தனது ஒற்றறியும் வேலையை மேலும் நடத்திக் கொண்டிருக்கிறன். நந்தினியும் பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளும் செய்யும் சதித் திட்டங்களை அறிந்து வந்து சொல்கிறன்.
4. பொன்னியின் செல்வர் வந்தியத் தேவனுடன் பெரிய கடற்படை தயாரித்துக் கொண்டு கடற்கொள்ளைக்காரர்களை அடக்கிச் சோழ சாம்



ராஜ்யத்தைக் கடல்களுக்கு அப்பால் உள்ள நாடுகளில் நிலைநாட்டுகிறார்.

உத்தம சோழருக்குப் பட்டம் கட்டிப் பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு அவர் இறந்ததும், பொன்னி யின் செல்வர் சிங்காதனம் ஏறு கிறார். 'இராஜ ராஜ சோழன்' என்ற பட்டத்துடன் நீண்ட காலம் சோழ சாம்ராஜ்யத்தை ஆளுகிறார்.

5. பழைய மதுராந்தகன் ஆபத்துதவி களின் தூண்டுதலாலும் ஈழ மன் னன், சேர மன்னன் உதவி கொண் டும் பாண்டிய நாட்டைக் கவர்ந்து முடிசூட்டிக் கொள்ள முயலுகிறான். அவனுடைய முயற்சி பெரிதும் பலம் பெறுகிறது. இராஜராஜ சோழர் பட்டத்துக்கு வந்த பிறகு அமரபுஜங்கன் நெடுஞ்செழியனைப் போரில் வெல்கிறார். அவன் வீர சொர்க்கம் எய்துகிறான்.

6. திருப்புறம்பயம் காட்டில் முடி சூட்டப்பட்ட இளம் பாண்டியனும் பாண்டிய ராஜ்யத்துக்கு உரிமை கொண்டாடுகிறான். அவன் போர்க் களத்திலிருந்து தப்பிச் சென்று மறு படியும் நாட்டைப் பெறச் சதி செய் கிறான். இவன் பிற்காலத்தில் இராஜேந்திர சோழனால் போரில் முறியடிக்கப்படுகிறான்.

7. நந்தினி அமரபுஜங்கன் இறந்த பிறகு தானும் உயிர் துறக்கிறாள். அதற்கு முன்னால் அவளை இராஜ ராஜ சோழர் சந்திக்கிறார். அவ ரிடம் தன் பிறப்பைக் குறித்த உண்மையையும் கரிகாலரின் மர ணத்தைப் பற்றிய உண்மையையும் கூறிவிட்டு இறக்கிறாள்.

8. குடந்தை ஜோதிடரின் கூற்றுக்கள் வானதியின் விஷயத்தில் பலிக்கின் றன. (சோதிடர் சாஸ்திரம் பார்த் துச் சொன்னாரா? ஊகத்தினால் சொன்னாரா, நாம் அறியோம்.) வானதிக்குப் பிறக்கும் குழந்தை யான இராஜேந்திரன் 'கங்கையும் கடாரமும் கொண்ட சோழன்' என்று பிற்காலத்தில் சரித்திரத்தில் புகழ் பெறுகிறான்.

ஆனால் வானதி தன் சபதத்தை நிறைவேற்றிவிட்டு உயிர் துறக் கிறாள். இராஜ இராஜனுடன் சோழ சிங்காதனம் ஏறுகிறவள் 'உலக மகாதேவி' என்னும் திருநாமம் கொண்ட இன்னொரு ராணியாவாள்.

9. ஆபத்துதவிகள் பாண்டிய ராஜ் யத்தை ஸ்தாபிக்கும் முயற்சிகளில் மேலும் ஈடுபட்டு வருகிறார்கள். நந்தினி உயிரோடு இருந்த வரை யில் ஆதித்த கரிகாலனுடைய அகால மரண இரகசியத்தைப் பற்றி விசாரிக்கப்படவில்லை. அதில் நந் தினியின் பெயரும் வரும் என்ற காரணத்தினால்தான். நந்தினியின் மரணத்துக்குப் பிறகு இராஜராஜ சோழன், ரவிதாஸன் முதலிய ஆபத்து உதவிகளைக் கைப்பற்றித் தண்டனை விதித்து அவர்களுடைய சொத்துக்களைப் பறிமுதல் செய்ய வும் கட்டளை பிறப்பிக்கிறான்.

நேயர்கள் அவ்வளவாகக் கவலைப் படாத இன்னும் சில கதாபாத்திரங் களைப் பற்றிய விவரங்களையும் கூறிவிடு கிறேன்.

சுந்தரசோழர் காஞ்சி பொன் மாளிகையில் மூன்று ஆண்டு காலம் வசித்துவிட்டு அங்கேயே உயிர் துறந்து 'பொன் மாளிகைத் துஞ்சிய தேவர்' என்று பெயர் பெறுகிறார். அவ ருடைய அருமை மனைவி வானமா தேவி, — மலையமானுடைய மகள், — அவருடன் உடன்கட்டை ஏறிச் சொர்க் கம் அடைகிறாள்.

பார்த்திபேந்திரன் குந்தவை தன்னை நிராகரித்துவிட்ட கோபத்தினால் காஞ்சி யில் சுதந்திர பல்லவ ராஜ்யத்தை நிலை நிறுத்தப் பார்க்கிறான். அதில் தோல்வி அடைந்து சந்ததியில்லாமல் மாண்டு போகிறான்.

கந்தமாறன் பாலாற்றின் வடபேற் கில் புதிய மாளிகை கட்டிக் கொண்டு சோழ சாம்ராஜ்யத்துக்குத் தொண்டு செய்கிறான். அவனுக்குப் பின் சம்பு வரையர் குலம் பிரசித்தி அடைகிறது.

நேயர்களைத் திருப்திப்படுத்துவதற் காகவே மேலே கண்டவற்றை எழுதி னேன். உண்மையில், இவை இன்னும் ஒரு பெரிய சரித்திரக் கதைக்கு ஆதார மாகக் கூடிய முக்கிய நிகழ்ச்சிகளாகும்.

உத்தம சோழருக்குப் பின்னால் சிங்கா தனம் ஏறிய இராஜ ராஜன், இராஜேந் திரன், ராஜாதிராஜன் வீரராஜேந்திரன் குலோத்துங்க சோழன் முதலிய சோழப் பேரரசர்களின் காலத்திய மகோந்நத நிகழ்ச்சிகள் 'பொன்னி யின் செல்வன்' கதையைப் போல் பல சரித்திரக் கதைகள் புனைவதற்கு ஆதாரமாகக் கூடியவை.

இந்தக் கதையின் ஆசிரியரைக் காட் டிலும், அறிவிலும் ஆற்றலிலும் ஆராய்ச்சியிலும் மிக்கவர்கள் வருங் காலத்தில் சோழ சரித்திரத்தை அடிப் படையாகக் கொண்ட பல மகோந்நத மான நவீனங்களை எழுதித் தமிழகத் துக்கு மேலும் மேலும் தொண்டு செய் வார்கள் என்று நம்புகிறேன்.



# தலைவலியா?
# அனஸின்

## விரைவிலே குணம் பெற மேலானது.
## ஏனெனில் அது சக்தி வாய்ந்தது; நம்பகமானது.



"அனஸின் தலைவலியை விரைவிலே அகற்றுகிறது" என்று அடித்துக் கூறுகிறார், பம்பாய் ஆபீசர் திரு. எஸ். என். எஸ். ராவ். "என்னுடைய கைப் பெட்டியில் எப்போதும் ஒரு ஸ்ட்ரிப் அனஸின் இருக்கும்"

**சக்தி வாய்ந்தது**—ஏனெனில், உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும் வலி நிவாரணியை அதிக அளவில் கொண்டது அனஸின். ஆகையால்தான் அனஸின் வலியிலிருந்து விரைவிலேயே நிவாரணமளிக்கிறது.

**நம்பகமானது**—ஏனெனில், டாக்டரின் நம்பகமான மருந்தைப் போல் பல மருந்துகளின் கலவையே அனஸின். அதை குழந்தைகளுக்கும் கொடுக்கலாம்—எல்லா மருந்துகளுக்கும் கேட்பது போல உங்கள் குழந்தைக்கான இதன் சரியான அளவையும் டாக்டரிடம் கேளுங்கள்.

ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவினால் ஏற்படும் வலிகள் மற்றும் நோவுகள், தலைவலி, முதுகுவலி, தசைவலி, பல்வலி ஆகியவற்றுக்கு அனஸின் சக்திவாய்ந்த நிவாரணி

# அனஸின்

இந்தியாவின் புகழ் பெற்ற வலி-நிவாரணி



Regd User of TM: Geoffrey Manners & Co., Ltd.

காரைக்குடிப் பையனைப் பற்றித் தகவல் கிடைத்தபோது பஞ்சாபகேசன் அவ்வளவாக உற்சாகம் காட்டவில்லை. ஏழெட்டு மாதங்களுக்கு முன் அவர் தம் பெண் கல்யாண விஷயத்தில் எடுத்துக் கொண்டிருந்த அக்கறையில் நூற்றில் ஒரு பங்குகூட இப்போது அவரால் எடுத்துக் கொள்ள முடியாத நிலை. அவருடைய பொருளாதாரம் ஆட்டம் கண்டிருந்தது. வட்டி நிறையக் கிடைக்கும் என்ற ஆசையில் தம் சேமிப்புப் பணத்தில் பெரும் பகுதியை மரக் கடைக்காரர் ஒருவரிடம் ஒப்படைத்திருந்தார். ஆனால் அந்த மா வியாபாரி இரண்டு மாதங்களுக்கு முன்னால் யாரும் நினைத்திராத வகையில் 'இன்ஸால்வென்ஸி பெட்டிஷ'னைத் தாக்கல் செய்து விட்டிருந்தார்.

"நல்ல இடம். பையன் தாய் தகப்பனுக்குக் கட்டுப்பட்டவன். உங்களுக்குச் செலவும் அதிகம் வைக்கக் கூடிய நபர்கள் இல்லை" என்று உறவினர்கள் வற்புறுத்த ஆரம்பித்தார்கள். பஞ்சாபகேசன் மனைவி பார்வதியோ மேலே ஒரு படி போய், "குட்டையோ, நெட்டையோ கையிலே மீதி இருக்கிற பணத்தை வேறே எவனாவது வட்டிக்கு வாங்கிக் கொட்டாவி விடறதுக்கு முன்னாலே, உங்க பெண் கழுத்திலே தாலி ஏறும் வழியைப் பாருங்கள்" என்று எதுகை மோனையுடன் சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் மேடைப் பிரசங்கம் செய்ய ஆரம்பித்து விட்டாள். பஞ்சாபகேசன் யோசனை செய்ய ஆரம்பித்தார்.

காரைக்குடி கணேசன் பெரிய குடும்பஸ்தர். மூன்று பெண்களுக்கும் இரண்டு பிள்ளைகளுக்கும் கல்யாணம் நடத்தி அனுபவம் பெற்றவர். கடைசிப் பையன் சுந்தரம்தான் இப்போது கல்யாண மார்க்கெட்டில் பாக்கி நிற்பவன். சுந்தரம் இருப்பத்தூரில் தபாலாபீஸில் குமாஸ்தாவாக வேலை பார்த்துக் கொண்டிருந்தான்.

பார்வதியின் நச்சரிப்புத் தாங்க முடியாமல் பஞ்சாபகேசன் காரைக்குடிக்கு ரயில் ஏறினார்.

கணேசன் அப்பாவி மனிதராகத் தோற்றம் அளித்தார். பஞ்சாபகேசனிடம் மனம்

## கல்யாணக் கதைகள்-8



திறந்து பேசினார். சுற்றிச் சுற்றி ஏதோ ஒரு வெளி வட்டத்தில் இருவரும் உறவுக்காரர்கள் என்றுகூடத் தெரிய வந்தது.

"இதோ பாருங்கள் பஞ்சாபகேசன்! ஜாதகம் பொருந்தி யிருக்கிறது என்று சொல்கிறீர்கள். அதுவே போதும். ஏதோ உங்

# ரஸமான வியவகாரம்

கோமதி ஸ்வாமிநாதன்

உங்கள் கண்களுக்கு நான் ஒரு ராட்சசனாகத் தென்பட விரும்பவில்லை'' என்றார் கணேசன் வேடிக்கையாக.

லௌகிக விஷயங்களில் பேச்சு ஓடிய போது பஞ்சாபகேசன் அசந்து போனார். கணேசன் அளவுக்கு அதிகமாக ஒன்றுமே கேட்கவில்லை. கணேசன் குடும்பத்தினர் சம்பிரதாயமாகப் பெண் பார்க்க வரும் நாளைக் குறிப்பிட்டு விட்டுப் பஞ்சாபகேசன் ஊருக்குத் திரும்பினார். பார்வதிக்குப் பரம திருப்தி.

குறிப்பிட்ட நாளில் கணேசன், கணேசன் மனைவி, பிள்ளை நாராயணன், அவன் சம்சாரம் ஆகிய நால்வரும் பெண் பார்க்கத் திருவாரூருக்கு வந்து சேர்ந்தார்கள். மாப்பிள்ளைப் பையன் சுந்தரத்தை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த பஞ்சாபகேசன் வீட்டாருக்குக் கொஞ்சம் ஏமாற்றம். கடைசி நேரத்தில் லீவு கிடைக்காததால் சுந்தரத்தால் வர




களுக்கும் சிரமம் இல்லாமல், எங்கள் கௌரவமும் குறையாமல் கல்யாணத்தை நடத்தி விடுங்கள். இதோ இருக்கிறானே நாராயணன், இவன் என் இரண்டாவது பிள்ளை. இவன் என்னுடன்தான் இருக்கிறான். இவனைப் பார்த்தால் சுந்தரத்தைப் பார்க்க வேண்டாம். ஏன், எங்கள் வீட்டில் எல்லோருக்குமே ஒரேவித சாயல் தான்! நானும் மூன்று பெண்களுக்குக் கல்யாணம் செய்து அனுபவம் பெற்றவன் என்ற முறையில்,

முடியவில்லை என்றும், அவன் புகைப் படம் ஒன்றைக் கொண்டு வந்திருப்பதாகவும் சுந்தரம் தன் தாயார் விருப்பத்துக்குக் கட்டுப்பட்டவன் என்றும் பஞ்சாபகேசன் ‚ குடும்பத்துக்கு அறிவிக்கப்பட்டது.

சம்பிரதாயமாகப் பெண் பார்க்கும் காட்சி நடந்தது. பஞ்சாபகேசன் பெண் நீலாவுக்கு நல்ல சாரீரம். கேள்வி ஞானத்தில் இரண்டு கீர்த்

தனைகளை நன்றாகவே பாடினாள். அவள் பாடிக் கொண்டிருக்கும்போதே சுந்தரத்தின் தபால் கார்டு அளவுள்ள புகைப்படம், சர்க்கார் காரியாலயச் சுற்றறிக்கை போல் ஒவ்வொருவர் கையாக மாறிக் கொண்டிருந்தது. நீலா பாடி முடிந்ததும் நாராயணனின் மனைவி அந்தப் புகைப்படத்துடன் நீலாவை உள்ளே அழைத்துக் கொண்டு போய் விட்டாள்.

வந்தவர்கள் கலகலவென்று பேசியதால் சூழ்நிலையில் எந்தவிதமான சிக்கலும் ஏற்படவில்லை. கணேசனுக்கும் அவர் மனைவிக்கும் நீலாவைப் பிடித்து விட்டது. பெண்ணுக்கும் திருப்திதான் என்று நாராயணன் மனைவி, உள்ளே யிருந்து வந்து சொன்னாள். அவள் கையோடு புகைப்படத்தை வாங்கிக்கொண்டு வந்து விட்டாள்.

காப்பி டிபன் முடிந்தது. முகூர்த்தத்தை எப்போது வைத்துக் கொள்ளலாம் என்ற பேச்சு வந்தது. பஞ்சாபகேசன் தேவையான சாமான்களைச் சேகரிக்க ஒரு மாத அவகாசம் வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அதையொட்டி முகூர்த்தத்தையும் உடனே தீர்மானித்து விட்டார்கள்.

கணேசன் குடும்பத்தாரை ரயில் ஏற்றி அனுப்பிவிட்டுப் பஞ்சாபகேசன் வீடு திரும்பினார். ஓரளவு மன நிம்மதி அவருக்கு. ஏறக்குறைய ஆயிரம் ரூபாய் வரை வெளியில் புரட்ட வேண்டி வரும். அது ஒன்றும் பிரமாதமான விஷயம் இல்லை. வடபாதி மங்கலம் முதலியார் சமயத்துக்குக் கொடுத்து உதவும் நண்பர்தான்.

வீட்டுக்குள் நுழைந்ததும் பார்வதி தன் கணவனைப் பார்த்து ''அந்தப் பிள்ளையோட படத்தை எங்கே வைத்தீர்கள்? நீலாவின் சிநேகிதிகளெல்லாம் அதைப் பார்க்க வந்திருக்கிறார்கள்'' என்றாள். ''அடடா! அதை நினைவாகக் கேட்டு வாங்கிக் கொள்ளாமல் போய் விட்டேனே. நாராயணன் அதைத் தன் பைக்குள் திருப்பி வைத்துக் கொண்டு விட்டான் என்றுதான் தோன்றுகிறது. அதற்கென்ன? நாளைக்கே ஒரு தபால் எழுதிப் போட்டால் அனுப்பி வைக்கிறார்கள்'' என்று சொல்லிவிட்டு நிம்மதியாக உட்கார்ந்தார்.

நாட்கள் நகர ஆரம்பித்தன. பார்வதி பாத்திரக் கடைகளுக்கும் பொற்கொல்லர் வீட்டுக்கும் நடக்க ஆரம்பித்தாள். பஞ்சாபகேசன் பணம் சம்பாதிப்பதில் ஊன்றிக் கவனம் செலுத்திக் கொண்டிருந்தார். வடபாதி மங்கலம் முதலியார் பணம் கொடுத்து உதவுவது பற்றி நிச்சயமாக ஒன்றும் சொல்லாதது கவலை தரக்கூடிய விஷயமாக இருந்தது. காரைக்குடியி லிருந்து வந்த பதிலில் புகைப்பட விஷயத்தைத் தவிர வேறு என்னவெல்லாமோ இருந்தது.

கடைசியில் கல்யாண வாரமும் வந்தது. பஞ்சாபகேசன் வீட்டுக்கு மின்சார வசதி கிடையாது. ஏதோ ஓர் அளவுக்கு வீட்டைப் புதுப்பித்துச் சுண்ணாம்பு அடித்துத் தயார் செய்திருந்தார். முன்னால் திருமணத்துக்கு ஒரு பந்தல், பின்னால் சமையலுக்கு ஒரு பந்தல். எதிர்பார்த்தபடி பணம் புரளாததால் மாயவரத்திலிருந்து சமையற்காரர்களை ஏற்பாடு செய்வதற்குப் பதிலாக உள்ளூர்க் கோயில் மடப்பள்ளிக்காரர்களையே அமர்த்தியிருந்தார். ஒப்புக்கொண்ட நகை அளவில் மூன்று சவரன்கள் குறைந்து போயிற்று. ஜவுளி வகையிலும் எதிர்பார்த்தபடி அமையவில்லை. சாதாரணம்தான். சம்பந்திகள் ஏதாவது தகராறு செய்தால் காலில் விழுந்தாவது சமாளிக்கத் தம்மைத் தயார் செய்து கொண்டார்.

கல்யாணத்துக்கு முதல் நாள் பிற்பகல். சம்பந்திகள் வந்து இறங்கி விட்டார்கள். அவர்களுக்குப் பக்கத்து வீட்டுக்காரரே இடம் ஒதுக்கிக் கொடுத்திருந்தார். அதிகக் கூட்டம் என்று சொல்ல முடியாது. சுமார் முப்பது பேர்கள் வரை வந்திருந்தார்கள்.

ரயிலை விட்டு இறங்கியதுமே கணேசன் தம் பிள்ளை சுந்தரத்தைப் பஞ்சாபகேசனுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். ரயிலடிக்குப் பஞ்சாபகேசனும் அவர் மைத்துனன் குருசாமியும் போயிருந்தார்கள். காரைக்குடிக்காரர்கள் பெண் பார்க்க வந்த தினத்தன்று குருசாமி திருவாரூருக்கு வந்திருந்தான். ஆகையால் கணேசன் குடும்பத்தாருக்குக் குருசாமியைத் தெரியும்.

ஐந்தாறு மாட்டு வண்டிகளுக்குப் பஞ்சாபகேசன் ஏற்பாடு செய்து வைத்திருந்தார். சம்பந்திகளை அந்த வண்டிகளில் ஏற்றி விட்டு விட்டு அவர்கள் இருவரும் பின்னால் நடக்க ஆரம்பித்தார்கள். இருவரும் ஏதோ தணிந்த குரலில் பேசிக் கொண்டு வந்தார்கள். கடைசியில் பஞ்சாபகேசன், ''குருசாமி! நீ ஒன்றும் வாயைத் திறக்காதே. ஏதாவது அவசியமானால், சந்தர்ப்பம் ஏற்பட்டால் பார்த்துக் கொள்ளலாம். இது பிரமாத விஷயம் இல்லை'' என்று அழுத்திச் சொல்லிவிட்டார்.

மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலம் பூர்த்தியானபோது இரவு மணி ஒன்பது. அந்தச் சர்வ சாதாரண ஒட்டை மோட்டார் காருக்கு ஏதாவது ஆட்சேபணை எழுப்புவார்களோ என்று பஞ்சாபகேசன் பயந்தார். ஆனால் யாரும் மூச்சு விடவில்லை. மாப்பிள்ளை சுந்தரமும் அவன் கூடப் பந்துக் குழந்தைகளும் ஜம்மென்று பவனி வந்தார்கள். அன்றைய இரவு நிகழ்ச்சிகள் முடிந்தன.

''மாப்பிள்ளை ஏன் சற்று இளைத்தாற்போல் இருக்கிறார்? தலை முடியெல்லாம் கூடக் கொட்டி யிருக்கிறாற்போல் இருக்கிறதே? போட்டோவில் 'ஜம்'மென்று இருந்தாரே!'' என்று பார்வதி அன்றிரவு தன் கணவனிடம் கேட்டபோது பஞ்சாபகேசன் அலட்சியமாக ''அதுதான் கணேசன் ரயில்வே ஸ்டேஷனிலேயே சொன்னாரே! பையன் நடுவிலே ஒரு வாரம் ஜுரத்திலே படுத்துக் கொண்டு விட்டானாம்'' என்று சொல்லி விட்டுச் சமையற்காரர்களுக்கு மறுநாள் காலை அயிட்டங்களைப் பற்றி நினைவுபடுத்தப் போனார்.

காலையில் நேரப்படி முகூர்த்தம் நடந்தேறியது. சபையில் சீர் வரிசைகளாக வைக்கப்பட்டிருந்த பாத்திரங்கள் பக்ஷணங்கள் வகைகளில் சம்பந்தி வீட்டார் எந்தக் குறையும் கண்டுபிடித்துச் சண்டைக்கு வரவில்லை. பெண்ணுக்கு என்னென்ன நகைகள் போட்டிருக்கிறீர்கள் என்றுகூடக் கேட்கவில்லை. ''இது என்ன கூரைப் புடவை? ஜரிகையை

# பெண்மையின் மென்மையை உணர ஆண்களைப் போல் 'ஷேவ்' செய்யாதீர் !

ஆன் பிரெஞ்சு ஹேர் ரிமூவர் தடவி பெண்மை வழியிலே உரோமத்தை வழித்தெறியுங்கள். அது மென்மையானது, இன்மணம் கொண்டது. உரோமங்களின் வேர்கள் வரை ஊடுருவிச் செயல் புரிகிறது. வெட்டுக்கள் இல்லை, உரோமத் துகள்கள் இல்லை. வாரக் கணக்கில் வழவழப்பான சருமம்.




## பட்டுப்போன்ற கரங்களுக்கும் கால்களுக்கும்.

## ஆன் பிரெஞ்சு ஹேர் ரிமூவர்

ட்ரேட்மார்க்கின் ரெஜிஸ்டர்ட் யூஸர்: ஜெப்ரிமேனர்ஸ் & கம்பெனி லிட். 95-AF-172-Tam

அப்புறம் வாங்கிச் சேர்த்துக் கொள்ளலாம் என்று கடையிலேயே விட்டு விட்டு வந்தீர்களோ?'' என்று இடக்காகச் சம்பந்தி வீட்டுப் பெண்மணிகள் பார்வதியிடம் கேட்கவில்லை. பஞ்சாபகேசன் கூரைப் புடவையைக் கூடச் சாதாரணமாகத்தான் வாங்கியிருந்தார்.

கணேசன் மனம் குளிர மருமகளையும் பிள்ளையையும் ஆசீர்வதித்தார். பஞ்சாபகேசனுக்கு ஒரே ஆனந்தம். இப்படி 'சாம்பிளுக்கு'க்கூட சண்டை போடாத தம்பதிகள் உண்டா என்று ஆச்சரியப்பட்டார். சாப்பாடாயிற்று. பிற்பகலில் நலங்கும் நடந்தது. நீலா உற்சாகமாகவே பாடினாள். அவளுக்குப் பூர்ண திருப்தி என்பதை அவள் குரலே எடுத்துக் காட்டியது.

கிராமாந்திரக் கல்யாணம் என்ற ரீதியில் 'ரிசப்ஷன்' என்றெல்லாம் பஞ்சாபகேசன் வைத்துக் கொள்ளவில்லை. திருமணத்துக்கு வந்திருந்தவர்கள் ஒவ்வொருவராக விடை பெற்றுக் கொண்டு ரயிலையும் பஸ்ஸையும் பிடிக்கக் கிளம்பினார்கள்.

நாராயணன் சம்சாரம்தான் அப்போது சினிமாப் பார்க்கும் ஆசையை மற்றவர்களிடம் தோற்றுவித்தாள். அவள் பார்க்காத படம் ஒன்று திருவாரூர்க் கொட்டகையில் ஓடிக் கொண்டிருந்தது. அவ்வளவுதான். கணேசனின் மூன்று பெண்கள், மாப்பிள்ளைகள், மூத்த பையன், அவன் சம்சாரம், நாராயணன் ஜோடி, மற்றும் ஒரு டஜன் வாண்டுகள் எல்லோருமாகச் சினிமாக் கொட்டகையை நோக்கிக் கிளம்பி விட்டார்கள். கணேசன் தம்பதி, சுந்தரம் மற்றும் இரண்டு மூன்று வயோதிக உறவுக்காரர்கள் இவர்கள்தான் கல்யாண வீட்டில் மிச்சம்.

இரவுச் சமையலை எட்டரை மணிக்கெல்லாம் சமையற்காரர்கள் முடித்து விட்டனர். சினிமாவுக்குப் போயிருப்பவர்கள் எல்லாரும் வந்த பிறகு எல்லோரும் ஒரே பந்தியாக உட்கார்ந்து சாப்பிடலாம் என்று கணேசன் சொல்லி விட்டார்.

பத்து மணி சுமாருக்கு எல்லோரும் வந்து விட்டார்கள். ஆண்கள், பெண்கள் எல்லோருமே கூடத்தில் ஒரே பந்தியாக உட்கார்ந்து விட்டார்கள். கூடத்தில் இரண்டு பெட்ரோமாக்ஸ் விளக்குகளும், பின்னால் சமையல் பந்தலில் இரண்டு பெட்ரோமாக்ஸ் விளக்குகளும் 'புஸ் புஸ்' என்று சீறிக்கொண்டு ஒளியைப் பரப்பிக் கொண்டிருந்தன. குருசாமி சமையல்காரர்களுக்குப் பரிமாறும் வேலையில் உதவிக் கொண்டிருந்தான்.

ரசம் பரிமாறும் கட்டம். குருசாமி அடுப்படியைப் பார்த்தான். பெரிய மூக்குச் சட்டி அந்தக் கோட்டை அடுப்பின்மீது மூடி சகிதம் அமர்ந்திருந்தது. மைசூர் ரசம் ஆறிப் போகாமல் இருக்கச் சமையல்காரர் பாத்திரத்தை அன்று பகலில் கூட அடுப்பின் மேல்தான் வைத்திருந்தார்.

இலையில் சாதம் பரிமாறியாயிற்று. குருசாமி ரசப் பாத்திரத்தைக் கையில் எடுத்துக் கொண்டு மடமடவென்று அத்தனை பேர் இலையிலும் முதல் ரவுண்டு ரசம் பரிமாறி விட்டான். அப்போதுதான் ''நிறுத்துங்கோ'' என்ற கூச்சல், கணேசனின் மூத்த பெண் கமலாட்சியிடமிருந்து கிளம்பியது. அவளே இலைக்கு எதிராக எழுந்து நின்றுவிட்டாள்.

''எங்களை அவமானப்படுத்த வேண்டும் என்று இத்தனை நேரம் காத்துக் கொண்டிருந்தீர்களா? மொட்டை வெந்நீரை எங்கள் இலையில் இப்படிக் கொட்டித்தானு அவமானப்படுத்த வேண்டும்?... அப்பா! அம்மா! சுந்தரம்! நாராயணா! எல்லோரும் இப்பவே கிளம்புங்கோ! இந்த வீட்டிலே இந்த அவமானம் போதும்!...'' என்று கத்தினாள் கமலாட்சி.

குருசாமி சட்டென்று மூக்குச் சட்டியிலிருந்த திரவத்தை ஒரு கரண்டி வாயில் விட்டுக் கொண்டான். கமலாட்சி சொன்னது உண்மை. வெறும் வெந்நீர்! சமையல் பந்தலுக்கு ஓடினான். ரசப் பாத்திரம் சமர்த்தாக ஒரு மூலையில் கீழே இருந்தது. பெட்ரோமாக்ஸ் விளக்கு ஒளி அடிக்கடி கூடியும் மழுங்கியும் விழுந்ததால் வந்த வினை. கரிய நிழல் வேறு ஏமாற்றி விட்டிருந்தது. பஞ்சாபகேசன் 'இதென்னடா திடீர் பூதம்!' என்று பயந்து பேசுவது எப்படி என்று தெரியாமல் விழித்தார்.

கணேசன் கையை அமர்த்தியும் அவள் ஆவேசம் அடங்கவில்லை. குருசாமி அசல் ரசத்தை அவள் முன் கொண்டு வந்து வைத்தும் அவள் கூச்சல் நிற்கவில்லை. பந்தியிலிருந்த குழந்தைகள் எல்லாம் பயந்து பாயசம் சாப்பிடாமல் எழுந்து விட்டன.

இப்போதுதான் பஞ்சாபகேசன் துணிந்து குருசாமிக்குக் கண்ணைக் காட்டினார். குருசாமி தொண்டையைக் கனைத்துக்கொண்டான். ''இந்தாங்க அம்மா! ஒவ்வொரு கல்யாணத்திலே மாப்பிள்ளையே மாறிப் போய் விடறாங்கள்! அதனாலே ரசம் வெந்நீரா மாறிட்டதிலே விசித்திரம் ஒண்ணுமில்லே! போட்டோவிலே ஓர் ஆள், நேரிலே ஓர் ஆள் என்று மாப்பிள்ளை மாறாட்டம் நடக்கிற காலம்! பெண்ணைப் பெற்றவர்கள் சும்மாதான் இருக்கிறார்கள்!... இந்தாங்கோ கப்பிலே மைசூர் ரசம்! சாம்பிள் பாருங்கோ!'' என்று ஒரு போடு போட்டான் குருசாமி.

கணேசன் துண்டால் முகத்தைத் துடைத்துக்கொள்வது போல் பாவனை செய்தார். சுந்தரத்தின் படத்துக்குப் பதிலாக நாராயணன் அவன் வயதில் இருந்தபோது எடுத்த படத்தைக் கொண்டு வந்து காட்டியது அவருக்குத் தெரியாதா என்ன?

அப்புறம் ஒருவரும் பேசவேயில்லை. தொடர்ந்து இலையில் வந்து விழுந்த பாயசமும் பகாளாபாத்தும் அவர்களைப் பேசவிடாமல் செய்தன.

அன்றிரவு கணேசன் தனிமையில் பஞ்சாபகேசனிடம் ''வேறு படம் இல்லை. அவசரத்துக்கு நாராயணன் படத்தை உபயோகப்படுத்திக் கொண்டோம்'' என்று பரிதாபமாகச் சொன்னார்.

''விட்டுத் தள்ளுங்கள்! நல்ல வேளையா பெண்ணுக்கும் பிள்ளைக்கும் ஒருவரையொருவர் பிடிச்சுப்போச்சு; கல்யாணமும் ஸிம்பிளா நடந்தாச்சு. இனி போட்டோப் பிரச்னை எதற்கு?'' என்றார் பஞ்சாபகேசன்.

**(சம்பவங்கள் உண்மை; பெயர்கள் மட்டும் மாறியுள்ளன.)**




★ இக் குறிப்பிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

ராஜாஜியின் 'என் கண்ணீர்' எங்களைச் சிலிர்க்க வைத்து விட்டது.

சங்கரநாராயணன் உழைப்பு அமோகம். கால்நடையாகக் கிராம மக்களிடம் சென்று மதுவிலக்குச் செய்தியைப் பரப்புகிறார். ரொம்ப உடல் சிரமம் அவருக்கு. அவ்வளவு தாங்க முடியவில்லை என்றாலும் மு. சி. வீரபாகுவாலூர். ஆனபடியால் கிராமங்களில் தங்கி அங்கங்கே பஸ்ஸில் சென்று பொதுக் கூட்டப் பேச்சுக்களில் ஈடுபடுகிறோம். செலவுக்கு அங்காங்கே அன்பர்கள் கைதான்.

இப்போது திருநெல்வேலி தாலுக்காவில் நெல்லை மாவட்ட மதுவிலக்குக் குழு பாத யாத்திரை செய்கிறது. அம்பாசமுத்திரத்துக்கும் தென்காசிக்கும் நிகழ்ச்சி நிரல் தயாராகி விட்டது. அம்பாசமுத்திரத்துக்கு மகாதேவன் நடத்திச் செல்கிறார். தென்காசிக்கு பி. கே. சாமி என்பவர். இனி மற்ற தாலுகாகளுக்குப் போகும் ஆட்களைத் தயார்ப்படுத்த வேண்டும்.

விட்டலாபுரம்
14–2–72 வேங்கடாச்சாரி

கல்கி இதழின் மூலம் வந்த ஆசாரிய சுவாமிகளின் ஆணையை நிறைவேற்றுவான் வேண்டி 17–1–72 திங்கட்கிழமையன்று நெல்லை மாவட்டம் பத்தமடை கிராமத்தில் ''இந்து நல்வழிமன்றம்'' தொடங்கப்பட்டது. அன்று இரவு 8 மணி சுமாருக்கு நடைபெற்ற பொதுக்கூட்டமொன்றில் பல அறிஞர்கள் கலந்துகொண்டு இந்து மதக் கோட்பாட்டின் அருமை பெருமைகளை மக்களுக்கு விளக்கினார்கள். பிடி அரிசித் திட்டம், பாமர மக்களிடையே மத உணர்வைத் தட்டி யெழுப்பும் வகையில், 'பகவத் நாம சங்கீர்த்தனம்' செய்யும் திட்டம், இந்து மத வழிபாட்டு முறைகளையும், இந்து மதத்தின் அருமை பெருமைகளையும் மக்களுக்கு எடுத்துச் சொல்வான் வேண்டி ஒரு குழு அமைக்கும் திட்டம், முடிந்த அளவில் ஏழை மக்களிடையே சமூக சேவை செய்யும் திட்டம், இன்னபிற செயல் திட்டங்கள் மேற்கொள்ள முடிவெடுக்கப்பட்டன.

திருநெல்வேலி மு. வள்ளிநாயகம், தலைவர்
28–1–72 ச. சீதாராமன், செயலாளர்

பிப்ரவரி 13ந் தேதி கல்கி இதழ் வட்ட மேஜையில் 1893ம் வருஷம் ''ரிஸ்ட்வாட்ச்'' உபயோகத்துக்கு வரவில்லை என்று ஸ்ரீமதி ப. நடராஜன் எழுதியது சரியல்ல.

நானும் என் தகப்பனார் அவர்களும் உபயோகப்படுத்தியதையே குறிப்பிடுகிறேன். முன்காலத்தில் ஒரே பாக்கெட் வாட்சைக் கச்சம் வைத்து வேஷ்டி உடுத்தியிருக்கும் சமயம் இடுப்பில் வாட்சைச் செருகி, சங்கிலியை முன்பக்கம் மாட்டிக் கொள்ளுவதும், ஷர்ட்டு, கோட்டு போடும் சமயம் பாக்கெட் வாட்சாக மாட்டிக் கொள்வதும், வெளியூர் பிரயாண காலத்தில் ரிஸ்ட் வாட்சாக உபயோகிப்பதும் உண்டு. அதற்கு ஒரு விதமான தோல் பட்டை உண்டு. இன்றைய தினம் அந்த வாட்சு, தோல்பட்டை, இடுப்பில் செருகும் வெல்வெட் பை, வெள்ளி செயின், எல்லாம் என் கைவசம் இருக்கின்றன. சித்திரம் வரைந்தவர் எழுதியது சரியே.

கோயமுத்தூர்–2
10–2–72 என். வி. ரங்கராகவன்

அரசு ஊழியர்களின் பணிகளுக்கு ஓர் அளவும் முறையும் இருந்தன. இப்போது அரசின் ஊழியர்கள் அரசின் கருவியாக எதையும் செய்ய வேண்டிய நிலைக்கு மாற்றப்பட்டு விட்டனர். குடும்பக் கட்டுப்பாட்டுச் சிகிச்சைக்கு ஆள் பிடிக்கும் வேலை சமீபத்தில் கட்டாயமாக்கப்பட்டது. இப்போது பரிசுச் சீட்டு விற்கும் வேலை கட்டாயமாக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு அலுவலகத்துக்கும் பத்தாயிரம் இருபதாயிரம் என்று பரிசுச் சீட்டுக்களை அனுப்பி விற்க வேண்டிய பொறுப்பினை ஊழியர்களிடம் ஒப்படைக்கிறார்கள். அலுவலகத்தில் குவியும் வேலைப் பிரச்னையைப் பற்றிக் கவலைப்படுவதா? அல்லது இந்தப் பரிசுச் சீட்டு விற்பனைக் கவலையைப் படுவதா? இந்தச் சூழலில் நிர்வாகப் பணியினை அவர்களால் செம்மையாகச் செய்ய முடியுமா?

இதில் இன்னொரு பிரச்னையும் உள்ளது. தனிப்பட்ட ஏஜெண்டுகளுக்குப் பத்து சதவிகிதம் கமிஷன் தரும் அரசு, தனது ஊழியர்களுக்கு இச்சலுகையைத் தரவில்லை. கசக்கிப் பிழிந்து வேலையை வாங்கிக் கொள்கிறார்கள்.

காஞ்சிபுரம்–2
26–1–72 லலிதா செல்லப்பா

★ விவசாயிகளின் விளைபொருட்களை மார்க்கட்டிங் கமிட்டியில்தான் (ஒழுங்கு முறை விற்பனைக் கூடம்) கொண்டு வந்து விற்பனை செய்ய வேண்டும் என்ற மசோதா சட்டமன்றத்தில் நிறைவேற்றப் பட்டது. விவசாயிகளாகிய எங்களுக்கு வேதனை தருவதோடு விவசாயிகளின் ஜீவாதார உரிமையைப் பறிப்பதாகும். கமிசன் கடைகளில் விற்பனை செய்வதால் விவசாயிகளுக்குக் கூடுதல் விலை கிடைப்பதோடு அவர்களுக்குத் தேவைப் படும் நேரத்தில் சரக்கை வைத்து முன் பணமும், கடனும் தருகிறார்கள். அதனால் விவசாயத்தைப் பெருக்க முடிகிறது.

சர்க்காரும் கடன் தருகிறது என்று சொல்லலாம். ஓர் ஏக்கருக்கு உரக் கடன் ரூ. 300 தருகிறார்கள் என்றால், அதற்கு நூறு ரூபாய் செலவு செய்தால்தான் வாங்க முடிகிறது. அதுபோல் தான் மற்றச் சர்க்கார் கடன்கள் விஷயமும். இவ்வாறு ஏழை விவசாயிகள் தான் மிகுந்த கஷ்டப்படுவார்கள்.

கரிவலம் வந்தநல்லூர்
15–1–72 வி.என்.எஸ்.பி. நடராஜன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

## இப்பெண்ணின் பேரெழிலுக்குக் காரணமென்ன?




# முத்தென ஒளிரச் செய்யும் லக்மே வேனிஷிங் க்ரீம்

லக்மே வேனிஷிங் க்ரீம் உங்கள் சருமத்தில் மறைந்து செயலாற்றுகிறது. அது உடனடியாக உங்கள் முகத்தை எழிலோங்கச் செய்கிறது. சிறிது தடவிப் பாருங்கள். முத்துப் போல் ஒளிரச் செய்யும் அதன் விசேஷ செயலாக்கம் விந்தை புரிவது தெரியவரும்.

உங்கள் முகமும் முத்தென ஒளிரும் இந்த இலேசான படிமானத்தின் மீது சிறிது லக்மே முகப்பவுடர் பூசுங்கள். இப்போது கண்ணாடியில் பாருங்கள். நீங்கள் எழிலோங்கி எடுப்பாக விளங்குவீர்கள்!

## லக்மே வேனிஷிங் க்ரீம்

Lakme

ASP/L-86

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




**ஒரே ஒரு சலவையில்**
**ஸூப்பர் ஸர்ஃப்,**
**வேறெந்த சலவைப்**
**பவுடரையும் விட**
**அதிக வெண்மை தருகிறது!**

அமோகமான சலவைத் திறன் படைத்தது ஸூப்பர் ஸர்ஃப். கண்மறைவான அழுக்குகளையும் அகற்றிவிடும். காண்போர் பொறாமைப்படும் கற்பனை கடந்த வெண்மை. கேட்பானேன், இந்தியாவின் தலைசிறந்த ரகம் : ஸூப்பர் ஸர்ஃப்!

**ஒப்பற்ற வெள்ளைவெளேர் சலவைக்கே ஸூப்பர் ஸர்ஃப்**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-SU. 116 - 140 TM